
PARLE
Parle-G



ந்தமாமா விஜயா
கம்பைன்ஸ்

# விஜய பிரதாபன்

சிங்கீதம் சீனிவாசராவ் B.வெங்கட்ராம ரெட்டி

Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!








It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.

From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !










HANDAMAMA
OLLECTION

ARTIG1246




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



## போட்டியல்ல; ஒத்துழைப்பே

முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன் நம் பல்கலைக் கழகங்கள் டாக்டர் பட்டம், பி.எச்.டி, எல்.எல்.டி, டி.எஸ்.சிக்கள் பெற்றவர்களின் பெயர்களை மட்டும் வெளியிட்டன. ஏனெனில் இப்பட்டங்களைப் பெறுவது உழைத்துப் புரியும் சாதனையாகும். மற்ற தேர்வுகளில் தேர்ந்தவர்களின் எண்கள் செய்தித்தாள்களில் பிரசுரிக்கப் பட்டன. வருடாந்திர பட்டமளிப்பு விழாவிற்குப் பின் தங்கப் பதக்கங்கள் பெற்றவர்களின் பெயர்கள் பிரசுரிக் கப்பட்டன. இவர்களும் வெகுசிலரே. பள்ளி இறுதித் தேர்வுகளிலும் மாணவர்களின் எண்களே பிரசுரிக்கப் பட்டன.

ஆனால் இன்றோ மாணவர்களின் எண்கள் பத்திரி கைகளில் பிரசுரிக்கப்படுவதில்லை. உயர் மதிப்பெண்கள் பெற்ற மாணவர்களின் எண்களையும் அவர்கள் பெற்ற மதிப்பெண்களையும் அந்தப் பள்ளிகள் விளம்பரங்களாக வெளியிடுகின்றன. மாணவர்களின் புகைப்படங்களும் சில சமயங்களில் இடம் பெறுகின்றன.



இது மாணவர்களிடையே போட்டியை ஏற்படுத்து வது இல்லையா? இது முறையற்றதுதானே! கல்வியை மனிதத் தன்மையுடன் கூடியதாக ஆக்கி மாணவர்கள் நலனைப் பகிர்ந்து கொள்ளச் செய்தல் வேண்டும். வெற்றி தோல்விகளை குறிப்பிட்டுக் காட்டுவதால் அல்ல. இதனை எல்லாப் பள்ளிகளும் கவனிக்குமா?

மதிமுகம் : 95 1994 புன்னகை : 1

தனிப்பிரதி : ரூ. 4.00 வருட சந்தா : ரூ. 48.00



செய்திகளும் தகவல்களும்

# உருவாகிக் கொண்டிருக்கும் நாடு

இரண்டு கடிதங்களோடு ஆரம்பமாகி இருதலைவர்களின் கைகுலுக்கலோடு முடிவுற்ற மேற்காசியப் பிரச்சினை பற்றி சென்ற நவம்பர் இதழில் குறிப்பிட்டிருந்தோம். பாலஸ்தீன நாடு உருவாகஅது அமைந்த விதத்தைக் கண்டோம். வாஷிங்டன் நகரில் கடந்த செப்டம்பரில் இஸ்ரேலும் பாலஸ்தீன விடுதலை இயக்கமும் செய்து கொண்ட வரலாற்றுப் புகழ் பெற்ற ஒப்பந்தப்படி இஸ்ரேல் கடந்த 27 ஆண்டுகளாக ஆக்கிரமித்து வந்த மேற்குக் கடற்கரைப் பகுதி, காஜாப் பகுதி ஆகியவற்றிலிருந்து மூன்று மாதங்களுள் வெளியேறி விட வேண்டும். இது பாலஸ்தீனியர்கள் அங்கு தம் சுதந்திர நாட்டை அமைக்க வழிகோலும்.



ஆனால் அவ்வித வெளியேற்றம் ஒப்பந்தப்படி டிசம்பர் 13-ந் தேதி வரை நடக்கவில்லை. மேலும் அங்கு வன்முறை மிக பயங்கரமாகி விடுதலை இயக்கத்தினருக்குமிடையே கடும் மோதல்கள் ஏற்பட்டு சமாதானப் பேச்சிற்கு முட்டுக்கட்டை போட்டது போலாயிற்று. இதன் பின் நார்வே எடுத்துக் கொண்ட முயற்சியின் பயனாக முந்தைய வாஷிங்க்டன் ஒப்பந்தம் செயலாக்கப்பட்டது.

பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராபத்திடமிருந்து இஸ்ரேல் நாட்டை அங்கீகரித்ததாயும் இஸ்ரேலிடமிருந்து பாலஸ்தீன விடுதலை இயக்கத்தை அங்கீகரிப்பதாயும் கடிதங்களை வாங்கிக் கொடுக்க நார்வே முக்கிய பங்கை வகித்தது.

அதன் பிறகே இருதரப்புப் பிரதிநிதிகளும் அமெரிக்க அதிபர் பில் க்ளின்டனின் முன்னிலையில் வாஷிங்க்டனில் பேசி முடித்த ஒப்பந்தத்தில் கையொப்பம் இடுவதற்கு ஒப்புக் கொண்டார்கள்.

மூன்று மாதங்களுள் அதிகார

மாற்றம் நடந்து விடும் என உலகமே எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயம் டிசம்பரில் நடந்த ஹெப்ராஸ் மசூதி பயங்கரச் சம்பவத்தில் 30–40 பாலஸ்தீனியர்களின் உயிர் போக்கப்பட்டது எல்லோரையும் திகைக்க வைத்தது. இதனால் உடனேயே பாலஸ்தீன விடுதலை இயக்கம் பேச்சு வார்த்தை நடந்த இடத்திலிருந்து வெளியேறியது.

அப்பகுதியில் சகஜநிலை ஏற்பட்டபின் எகிப்து பெரும் முயற்சி எடுத்து இருதரப்பினரும் மீண்டும் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கச் செய்தது. எகிப்தின் தலைநகர் கெய்ரோவில் மே 4–ல் இஸ்ரேல் பிரதமர் இஸ்சக் ராபினும் பாலஸ்தின விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராபத்தும் கடைசி ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டார்கள். எட்டு மாதங்களில் இரண்டாவது முறையாக இருதலைவர்களும் கை குலுக்கினார்கள்.




காஜாப் பகுதியில் மே 10–ல் 150 பாலஸ்தீனக் காவல் வீரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். அடுத்த வாரம் அங்குள்ள இஸ்ரேலின் ராணுவத் தலைமை அலுவலகம் பாலஸ்தீனிய விடுதலை இயக்கத்தினரிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வாறு அப்பகுதியில் அதிகாரமாற்றம் முழுமையாக நடைபெற்றது.

மேற்குக் கடற்கரை நகர் ஜெரிகோவில் மே 13–ல் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினர் காவல் நிலையப் பொறுப்பை ஏற்று அக்கட்டடத்தில் மீது தமது கொடியைப் பறக்க விட்டார்கள். அந்த நிகழ்ச்சி அங்கிருந்த பாலஸ்தீனியர்களை மெய்சிலிர்க்க வைத்தது. இவ்வாறு பாலஸ்தீனம் நீண்ட பேச்சு வார்த்தைகளுக்குப் பின் ஒரு புதிய நாடாக அமைந்தது.

அக்டோபரில் பொதுத் தேர்தல் நடக்கும் வரை பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைமையில் இடைக்கால அரசாங்கம் அமைக்கப்படும். முழுமையாக பாலஸ்தீனம் உருவாகும் வரை மேற்கு ஆசியாவில் மிகச் சிரமப்பட்டு நிறுவப்பட்ட அமைதியை நிலைத்திருக்குமாறு செய்ய உலக நாடுகள் உதவ வேண்டும் என்று பாலஸ்தீன விடுதலை இயக்கமும் இஸ்ரேலும் வேண்டுகோள் விடுத்துள்ளன.



# உருமாறிய பலன்

வெகு காலத்திற்கு முன் சித்திர புரத்தை சிம்மவர்மன் என்பவன் ஆண்டு வந்தான். அவன் மகன் சிங்காரவர்மன். சிங்காரம் மிகவும் பலமிக்கவன். தைரியசாலி. துணிச்சல் மிக்கவன். ஆனால் தான் என்ற அகம்பாவம் கொண்டவன்.

சிங்காரம் கவிஞர்களை மதிக்கவில்லை. கலைஞர்களைப் பாராட்டவில்லை. சாது சன்னியாசிகளுக்கு கௌரவம் அளிக்கவில்லை. கடவுள் மீதும் நம்பிக்கை கொள்ளவில்லை. தன்னை மிஞ்சியவன் எவனும் இல்லை என எண்ணி கர்வப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஒருநாள் ஞானதிருஷ்டி கொண்ட சக்தி வாய்ந்த முனிவர் ஒருவர் சிம்மவர்மனைக் கண்டு "மன்னா! உன் நாட்டிற்கு ஆயிரமாவது ஆண்டில் வரும் ஆபத்து பற்றி உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

அந்த ஆபத்து பற்றி அந்நாட்டில் பல கதைகள் கூறப்பட்டு வந்தன. முள்ளுக்காடு என்ற அடர்ந்த காட்டினுள் ஓரிடத்தில் ஒரு பெரிய டமாரம் உள்ளதாம். அது ஆயிரம் ஆண்டிற்கு ஒருமுறை ஒலி எழுப்புமாம். அந்த பயங்கர ஒலியால் நாட்டிலுள்ள கட்டடங்கள் அதிர்ந்து இடிந்து விழுந்து விடுமாம்.

அந்த இடத்திலிருந்து சற்றுத் தள்ளி ஒரு பாதாளக் கிணறு உள்ளதாம். அதில் இறங்கியவர் யாருமே உயிருடன் திரும்பி வந்ததில்லையாம். அதில் பாதாள லோகத்திற்குச் செல்லும் வழி இருக்கிறதாம். அந்த வழியாக ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை கொடிய விஷமுள்ள பத்துத் தலைப் பாம்பு ஒன்று வெளியே வந்து அந்நாட்டிலுள்ள ஜீவராசிகளை எல்லாம் விழுங்கி விடுகிறதாம். விஷத்தைக் கக்கி எல்லாப் பயிர்களை

– பாபநாசம் சாமா –



யும் அது எரித்து விடுகிறதாம்.

முள்ளுக் காட்டில் மூக்கையன் என்ற ராட்சஸன் யாருக்குமே தெரியாத ஓரிடத்தில் தூங்கிக் கொண்டிருக்கிறானாம். ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை அவன் விழித்து எழுந்து வந்து நாட்டிலுள்ள மனிதர்களை விழுங்கி விடுகிறானாம். இப்படி சித்திரபுர நாடு ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை அழிந்து பிறகு நூறு வருடங்களில் மறுவாழ்வு பெற்றுப் புதிய வீடுகள், புதிய தொழில்கள், புதிய மனிதர்கள் என்று ஏற்பட்டு வருகிறதாம்.

சிம்மவர்மனுக்கு இந்த ஆபத்து பற்றி நன்கு தெரியும். அதை மாமுனிவர் சொன்னதும் அவன் கவலைப்பட்டான். அப்போது அந்த முனிவரும் "இன்றைக்குச் சரியாக இரண்டாவது மாதம் முடிந்ததும் அன்று இந்த விதப் பேராபத்து உன் நாட்டிற்கு வரப் போகிறது" என்று எச்சரித்தார்.

இதை மன்னனருகே இருந்து கேட்ட இளவரசன் சிங்காரம் தன் வாளை எடுத்து அந்த முனிவர் மீது எறிந்தான். அது அவரது கமண்டலத்தின் மீது பட்டு விழுந்தது. சிங்காரமும் "உனக்கு வரும் இந்த ஆபத்தை முன்கூட்டியே அறியாத நீயா நாட்டிற்கு ஆபத்து வரப்போகிறது என்று கூற வந்து விட்டாய்? நீ சொல்வதை எல்லாம் நம்ப இங்கு யாரும் தயாராக இல்லை" என்றான்.

முனிவரும் கீழே விழுந்த கமண்டலத்தை எடுத்துக் கொண்டு "கர்வம் கொண்ட மன்னனால் நாட்டிற்கு நன்மை ஏற்படாது. இது வரப் போகும் ஆபத்தை விட மிக பயங்கரமானது. முதலில் இதைச் சரிப் படுத்துவது என் கடமை. இன்றைக்கு நாலாவது நாள் இந்த இளவரசனை எதிர்க்க ஒரு மாவீரன் வருவான். அவனே அடுத்து வரப்போகும் ஆபத்திலிருந்து இந்த நாட்டைக் காக்கப் போகிறான்" என்று கூறி விட்டு அங்கிருந்து சென்றார்.

நல்ல வேளையாக முனிவர் சிங்காரத்தைச் சபிக்கவில்லையே என்று சிம்மவர்மன் மகிழ்ந்தான். ஆனால் சிங்காரமோ முனிவரைப் பற்றிச்

சற்றும் கவலைப்படவில்லை.

முனிவர் அரச சபையிலிருந்து போய் ஒரு கிராமத்தை அடைந்தார். அங்கு ஒரு ஏழையின் வீட்டில் தங்கினார். அப்போது அந்த வீட்டுக்காரன் "எனக்கு வீரய்யன் என்ற மகன் இருக்கிறான். அவன் எதைக் கண்டாலும் பயப்படுவான். ஆனால் பேசுவது என்னவோ பெரிய வீரன் போலத்தான். அவனை எப்படி வழிக்குக் கொண்டு வருவது என்று தெரியவில்லை. தாங்கள்தாம் அவனைத் திருத்த வேண்டும்" என்று வேண்டினான்.



முனிவரும் "அவனை என்னோடு அனுப்பு. நான் சரிப்படுத்துகிறேன்" எனக் கூறினான். அந்த ஏழையும் அதற்குச் சம்மதித்து வீரய்யனை அவருடன் அனுப்பினான். முனிவர் அவனிடம் "நான் சொன்னபடி நீ செய்தால் உனக்கு மாபெரும் வீரன் என்ற பெயரும் கிடைக்கும். நீயும் அதற்காக கொஞ்சமும் சிரமப்பட வேண்டாம். நீ கத்தியைப் பிடித்துக் கொண்டு ஒரு சில விநாடிகளே தைரியமாக நிற்க வேண்டும். இப்படி நின்றால் நீ மறுபடியும் எப்போதும் சண்டை போடும் வாய்ப்பே வராது. இந்தச் சண்டையில் உன்னை எதிர்ப்பவனால் உன்னை அடித்து வீழ்த்தவோ காயப்படுத்தவோ முடியாது. அவன் தோற்று விடுவான். இதற்குப் பின் நீ சுகமாக வாழலாம்" என்றார். வீரய்யனும் அவர் சொல்கிறபடி செய்வதாகக் கூறினான்.

முனிவர் வீரய்யனை அழைத்துக் கொண்டு நான்காவது நாள் சிம்மவர்மனின் சபைக்குப் போய் "மன்னா! முள்ளுக் காட்டின் எல்லையிலுள்ள கிராமத்தில் ஒரு பெரிய ஆலமரம் உள்ளது. அதில் சில உயிரற்ற உடல்கள் உள்ளன. அவற்றில் பல சக்திகள் உள்ளன. அந்த உடலைப் பல பிசாசுகள் காவல் காத்து வருகின்றன. அந்த சக்திகளை எல்லாம் அடைந்து வர இளவரசன் சிங்காரவர்மனால் முடியும் என்று நினைத்தேன். ஆனால் அவன் என்னை மதிக்காததால் அவனால் அவற்றை அடைய முடியாது. அதனால் நாடு முழுவதும் சுற்றிப் பார்த்து இந்த



வீரய்யனைத் தேர்ந்தெடுத்து இங்கு அழைத்து வந்திருக்கிறேன். இவன் சிங்காரவர்மனை வாட்போரில் வென்று விட்டால் இவன் முள்ளுக் காட்டிற்குப் போய் நாட்டிற்கு வர இருக்கும் ஆபத்தைத் தடுப்பான். எனவே வீரய்யனும் சிங்காரமும் வாட்போர் புரிய ஏற்பாடு செய்" என்றார்.

சிங்காரம் சம்மதிக்கவே முனிவரின் கட்டளைப்படி இருவர் முகங்களையும் கருப்புத் துணிகளால் மறைத்து கண்கள் மட்டும் தெரியும் படிக் கட்டினார்கள். இருவரும் அணிய ஒரே மாதிரியான ஆடைகள் கொடுக்கப்பட்டன.

போட்டி ஆரம்பமாகி சில நிமிடங்களிலேயே முடிந்து விட்டது. ஒருவனது வாள் விழுந்து விட்டது. வாளை நழுவ விட்டவன் வீரய்யனாகத்தான் இருக்கும் என்று எண்ணினார்கள். ஆனால் வாளை இழந்தவனின் முகத்துணியை அகற்றிய போது அவன் சிங்காரமாக இருப்பது கண்டு திகைத்துப் போனார்கள். வென்றவன் வீரய்யனே. யாவரும் வீரய்யனைப் பாராட்டினார்கள்.

அப்போது முனிவர் அவர்கள் இருவரையும் தனியே அழைத்துப் போய் "என் மந்திர சக்தியால் உங்கள் இருவர் உருவங்களையும் மாற்றினேன். வீரய்யன் சிங்காரம் ஆனான். சிங்காரம் வீரய்யன் ஆனான். இந்த ரகசியத்தை நீங்கள் இப்போது கூறினால் யாரும் நம்ப மாட்டார்கள். வீரய்யன் தான் சிங்காரமாக எவ்வளவு காலம் இருக்க வேண்டும் என நினைக்கிறானோ அதுவரை சிங்காரம் வீரய்யனாக இருப்பான். இப்போது வீரய்யனாக இருக்கும் சிங்காரம் ஆலமரத்திற்குப் போய் சக்திகளை அடைந்து டமாரத்தையும் விஷப்பாம்பையும் ராட்சஸனையும் ஒழிப்பான்" என்றார்.

சிங்காரமாக மாறிய வீரய்யன் அரண்மனையில் வாழ்ந்தான். மன்னன் அவனிடம் "வாழ்க்கையில் வெற்றி தோல்வி என்பது சகஜமே. நீ தோல்வி அடைந்ததற்காக கவலைப் படாதே. மறுபடியும் ஏதாவது ஒரு போட்டியில் கலந்து கொண்டு

வெற்றி அடைந்து காட்டு. அப்போது உன்னை எல்லோரும் புகழ்வார்கள்" என்றான்.

அதுகேட்டு வீரய்யன் "வெற்றி தோல்வி எல்லாம் நம் கையில் இல்லை. கடவுள் சித்தம்தான். நான் தோல்வியுற்றது என் அகம்பாவத்தாலேயே. நான் முதலில் என் கர்வத்தை ஒழித்துக் கொள்ள வேண்டும். இதற்காக பண்டிதர்களிடம் கற்றும் புராணக் கதைகளைக் கேட்டும் சாது சன்னியாசிகளை வழிபட்டும் வருவேன். எனது நண்பன் ஒருவனை தினமும் நீதிக் கதைகள் சொல்லச் சொல்லி கேட்டு வருவேன்" என்றான்.



மன்னன் அவனைத் தன் மகன் சிங்காரம் என்றே நினைத்து இப்படி அவன் மாறியது கண்டு மகிழ்ந்தான். வீரய்யன் இவ்வாறு கூற அவன் பயப்பட்டதே காரணம். அதனால் போட்டி, சண்டை என்பதிலிருந்து தப்பவே இவ்வாறு கூறினான்.

அரண்மனைக்கு வந்தவர்களெல்லாம் தன்னை பெரிய வீரன் என்று புகழ்ந்தது வீரய்யனுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. கவிஞர்கள், பண்டிதர்கள், பாடகர்கள், கலைஞர்கள் என்று எல்லோரும் அவனை வர்ணித்தார்கள். அவனது நற்குணங்களை மெச்சினார்கள். அவனும் ஏழை எளியவர்களுக்கும் கஷ்டப்படுபவர்களுக்கும் தாராளமாகப் பொருளுதவி செய்து எல்லோருடைய பாராட்டுதல்களையும் பெற்று வந்தான்.

நாட்கள் கழிந்து கொண்டே இருந்தன. வீரய்யன் உருவிலிருந்த சிங்காரம் ஆலமரத்திலுள்ள சக்திகளை அடைந்து டமாரம், விஷப் பாம்பு, ராட்சஸன் ஆகிய எல்லாவற்றையும் ஒழித்து ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும் ஆபத்தை வராமல் தடுத்து என்றென்றும் நாடு வளமுற வழி செய்து விட்டுத் தலைநகருக்கு வந்தான்.

அப்போது அவனை முனிவர் கண்டு அரண்மனைப் பூங்காவிற்கு அழைத்துப் போய் "நீ சிங்கார உருவில் இருந்தபோது உன் அகம்பாவத்தால் அரிய வாய்ப்பை இழந்தாய். இப்போது உன் உருவிலுள்ள வீரய்

யன் மனம் வைத்தால்தான் நீ உன் உண்மை உருவை அடைய முடியும்" என்றார். அதுகேட்டு வீரய்யன் உரு வில் இருந்த சிங்காரம்தான் நாட்டின் அரசனாகும் வாய்ப்பை இழந்து விட்டதாக எண்ணி வருந்தினான்.

அப்போது முனிவரைக் காண வந்த சிங்காரம் உருவில் இருந்த வீரய்யன் அவரை வணங்கி "மகாத் மாவே! இனி நான் வீரய்யன் ஆகி விடுகிறேன். இந்த இளவரசன் தன் பழைய உருவத்தை அடையுமாறு செய்யுங்கள்" என்றான்.

முனிவர் அதுகேட்டு ஆச்சரியப் பட்டு "வீரய்யா! இப்போது உனக்கு இந்நாட்டின் அரசனாகும் வாய்ப்பு கிடைத்துள்ளதே. இதை நழுவ விடு கிறாயா?" என்று கேட்டார்.

அதற்கு வீரய்யன் "நான் அரச குமாரன் உருவில் இருப்பதால் என்னை எல்லோரும் மாவீரன் என்று புகழ்கிறார்கள். இதை நான் வெறுக்கிறேன். அதற்கான தகுதி என்னிடம் இல்லை. ஆனால் இள வரசனின் உருவில் இருந்து மக்களுக் குப் பல நன்மைகளைச் செய்தேன். இதனால் இளவரசர் மிக நல்லவர் என்ற பெயர் ஏற்பட்டு விட்டது. இதனால் திருப்தி அடைகிறேன். அந்த மாதிரி பெயர் எனக்கு வர வேண்டும் என விரும்பியே நான் என் வீரய்யன் உருவை அடைய விரும்புகிறேன்" என்றான்.

முனிவரும் "பேஷ். ஒரே கல்லில் இரண்டு மாங்காய். சிங்காரத்தின் கர்வம் ஒழிந்தது. நீ மாவீரன் எனப் பெயர் பெறப்பட்ட ஆசை அழிந்தது. இனி இருவர் உருவங்கள் மாற முன்போலாகி விடுங்கள்" எனக் கூறி அவர்கள் முன் போலானதும் முனிவர் அவர்களுக்கு ஆசிகளை அளித்துவிட்டுச் சென்றார்.

சிங்காரவர்மன் அகங்காரத்தை விட்,டொழித்து நற்குணவான் ஆனான். வீரய்யன் நன்கு கல்வி கற்று சிறந்த ஞானி ஆனான். இந்த மாற்றம் கண்டு இருவரது பெற்றோர் களும் அகம் மகிழ்ந்தனர்.






*(விசித்திரவர்மன் பேரறிஞர்கள் கூறியபடி காட்டிலேயே கோவில் கட்டி தேவியின் சிலையைப் பிரதிஷ்டை செய்தான். அவனுக்குப் பின் அவனது மகன் ஜெயவர்மன் பட்டத்திற்கு வந்தான். அவனிடமிருந்து முத்துமாலையை அபகரிக்க காம்போஜ மன்னன் வருணதத்தன் சதி செய்தான். அவன் ஒரு நடன மாதை அனுப்பி மாலையை எடுத்து வரச் செய்தான். ஆனால் அவள் எடுத்து வந்தது போலி முத்துமாலை. விசித்திரவர்மன் சதியை அறிந்து உண்மையான மாலையை பத்திரப்படுத்தி விட்டான். இதை வருணதத்தன் அறியவில்லை. விசித்திரவர்மன் இறந்ததும் அவர் எழுதிய கடிதத்தை ஜெயசேனர் ஜெயவர்மரிடம் கொடுத்தார். பிறகு -)*

ஜெயசேனர் கூறியதைக் கவனமாகக் கேட்ட ஜெயவர்மன் "சரி. அவர் அந்த மாலையை பத்திரப் படுத்தினாரேயல்லாது வேறு யாருக்கும் கொடுத்து விடவில்லை. சக்தி வாய்ந்த அந்த மாலையைப் பற்றி அவர் இதில் எழுதி இருக்கிறார். படிக்கிறேன்" எனக்கூறிக் கடிதத்தைப் படிக்கலானான்.

ஜெயவர்மா! முத்துமாலையின் சக்தி பற்றி உன்னிடம் ஜெயசேனர் கூறி இருப்பார். ஆனால் அதை நான் எங்கு வைத்திருக்கிறேன் என்பது பற்றி அவருக்குக் கூடத் தெரியாது. அது இருப்பது பற்றிய தடையங்களை மட்டும் எழுதியுள்ளேன்.

உலகமே வணங்கும் பரமேஸ்வரி கூட பெண்ணே. அவள் யார் முன் தலை வணங்குகிறாளோ அவர் இருக்கும் திசை எது? மனிதன்



வாழ மிக மிகத் தேவையான பஞ்ச பூதங்களில் ஒன்றை அவர் அளிக்கிறாரே. அதை ஒரே அடியில் ஒருவர் அளந்து அதற்குக் கேட்ட விலை என்ன? நன்றாகப் புரிந்து கொண்டால் அந்த அதிஷ்டக்காரன் பயன் பெறுவான். உனக்கு என் மனப்பூர்வமான ஆசிகள். உன் தந்தை விசித்திர வர்மன்.

கடிதத்தைப் படித்தபின் ஜெயவர்மன் அதைக் கண்களில் ஒத்திக் கொண்டு முன்பிருந்த பெட்டியினுள்ளே அதனை வைத்தான். ஐந்து தலைமுறைகளில் வந்தவர்கள் யாவரும் அக்கடிதத்தைப் படித்தனர். ஆனால் அவர்களுக்கு எதுவும் புரியாததால் எவ்வித முயற்சியையும் மேற்கொள்ளவில்லை. முடிவில் சுசேனனின் தந்தை மட்டும் அந்த முத்துமாலை கிழக்கு திசையிலுள்ள காட்டில் தேவியின் ஆலயத்துள்தான் எங்கோ வைக்கப்பட்டிருக்க வேண்டும் என ஊகித்தார். அந்தக் கோவிலில் தோண்டிப் பார்க்க முயன்ற போது எடுத்த எடுப்பிலேயே பெருந் தடை ஏற்படவே அவர் அம்முயற்சியை கைவிட்டு விட்டார்.

இதனை சக்திசேனையிடம் கூறி ஜெயசேனன் "நம் மன்னர்கூட அந்த முத்துமாலையைத் தன் மகனே கண்டுபிடிக்க வேண்டும் என் நினைக்கிறார் போலிருக்கிறது. அதனால்தான் மன்னர் உன் அறிவைப் பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்திருக்கிறார். மகாபுத்திசாலியான கீர்த்திசிம்மனுக்கு உன்னைப் போன்ற அறிவாளியின் துணை இருந்தால் இந்த வேலை எளிதில் முடிந்து விடும் என்று மன்னர் கருதுகிறார் போலும். காட்டில் கிழக்கு திக்கிலுள்ள தேவியின் கோவிலுக்குள்ளே கீர்த்திசிம்மனைச் சிறை வைத்திருப்பது போல வைத்திருக்கச் சொன்னது அவன் ஆலயத்தை உற்றுப் பார்த்து செயல்படுவான் என்பதற்காகத்தான்" என்றான்.

சக்திசேனை தான் மன்னரின் விருப்பம் என்ன என்பதைப் புரிந்து கொண்டு விட்டாள். சக்தி வாய்ந்த முத்துமாலையைக் கீர்த்திசிம்மன் கண்டுபிடிக்க வேண்டும் என்றும்

அதற்கு தன் ஒருத்தியால்தான் அவனுக்கு உதவ முடியும் என மன்னர் நினைக்கிறார் என்பதையும் அவள் புரிந்து கொண்டாள்.



தந்தை கூறியதை சக்திசேனை கேட்டுவிட்டு "ஆமாம். நீங்கள் சொல்வது சரியாகத்தான் இருக்க வேண்டும். இதை அவர் மறைமுகமாகச் சொன்னதால் இது எனக்கு வைக்கப் பட்ட பரீட்சையே ஆகும்" என்றாள்.

ஜெயசேனனும் "ஆமாம். இதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற முதல் பரீட்சையில் நீ தேறிவிட்டாய். இனி அடுத்து வருபவைகளிலும் வெற்றி பெற்றே விடுவாய்" என்றான்.

மறுநாள் ஜெயசேனன் அரண்மனைக்குள் சென்றபோது வாசலில் இருந்த வீரர்கள் "மன்னர் தம் அந்தரங்க ஆலோசனை அறையில் இருக்கிறார். அவர் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்" என்று கூறி அனுப்பினார்கள். ஜெயசேனனும் அங்கு போய்ச் சேர்ந்தான்.

மன்னனும் ஜெயசேனனைக் கண்டதும் புன்னகை புரிந்து "என்ன ஜெயசேனா! நீ உன் மகளைத் தனியாக அனுப்புவதற்குச் சம்மதந் தானே!" என்று கேட்டான்.

ஜெயசேனனும் சற்று நிதானமாக "நேற்று என் மகளைப் பற்றிச் சற்று உயர்வாகவும் பெருமையாகவும் பேசிவிட்டேன். ஆனால் நீங்கள் என் வீட்டிலிருந்து போன பிறகு என் மகளிடம் பேசினேன். அப்போதுதான் உங்கள் உள்நோக்கம் என்ன என்பது அவள் கூற எனக்கு தெரிந்தது. நானும் என் குடும்பத்தவரும் என்றென்றும் தங்களுக்குப் பணிபுரியத் தயாராக இருக்கிறோம். என் மகள் சக்திசேனை பௌர்ணமிக்கு முதல் நாள் இங்கிருந்து கிளம்பிச் செல்வாள். வழியில் அவள் அரசகுமாரனைச் சந்தித்து தாங்கள் கூறியதை எல்லாம் செய்வாள்" என்றான்.

ஜெயசேனன் கூறியதைக் கேட்ட சுசேனன் "நான் சொன்னதன் உட்கருத்தைப் புரிந்து கொண்டாள் உன் மகள் என்பது கேட்டு மகிழ்கிறேன். என் முன்னோர்களில் ஒருவரான



ஜெயவர்மர் மிகத் திறமையாக ஆண்டு கோசலத்திற்கு இணையாக எந்நாடும் இல்லை எனச் செய்தவர். ஆனால் காம்போஜ மன்னன் வருணதத்தன் நாட்டைப் பற்றிக் கவலைப்பட வில்லை. அவன் இங்குள்ள முத்து மாலையை அபகரித்துச் செல்வதில் குறியாக இருந்தான். அவன் இறக் கும் முன்தான் நடன மாதுவால் கொண்டு வரப்பட்ட முத்துமாலை போலி எனத் தெரிந்து கொண்டான். உண்மையான மாலை எங்கோ பத் திரப்படுத்தப்பட்டு விட்டது என்றும் ஒற்றர்கள் வாயிலாக அவன் அறிந் தான். அதுமுதல் கோசலத்திற்கும் காம்போஜத்திற்கும் கடும் பகைமையே இருந்து வருகிறது. ஆனால் இரு நாட்டு மன்னர்களுக்கும் அந்த சக்தி வாய்ந்த மாலை எங்கே இருக்கிறது என்பதுதான் தெரியவில்லை.

இப்போது காம்போஜத்தை ஆளும் கருடதத்தன் அந்த முத்து மாலையை எப்படியாவது அடைந்து விடுவது என்று உறுதி பூண்டிருக் கிறான் என்று நம் ஒற்றர்கள் தெரி விக்கிறார்கள். அந்த முயற்சியில் விசித்திரவர்மர் எழுதி வைத்த கடி தத்தைக் கவர முயல்கிறானாம். இதற்காக அனுப்பப்பட்ட மூவரை நம் காவல் வீரர்கள் கைது செய்து விட்டார்கள். இதனால் கருடதத்தன் வேறு வழியைக் கையாளப் போவதா கத் தெரிகிறது. அவனது திட்டம் என்ன என்பது தெரியாது. ஆனால் நாம் இப்போதே அந்த மாலையைத் தேடிக் கண்டு எடுத்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு காம்போஜத் தின் மீது படை எடுத்து அதனைத் தோற்கடிக்க வேண்டும். அதற்காகத் தான் குருகுலத்திலிருந்து வரும் கீர்த்தி சிம்மனை நடுவழியில் திருப்பி தேவி யின் ஆலயத்துள் வைக்க வேண்டும் எனக் கூறினேன். உன் மகள் புத்தி சாலி. அவளும் அவனுக்கு உதவ லாம். என் யோசனை எப்படி?" என்று கேட்டான்.

அப்போது ஜெயசேனன் "அது சரி. அந்த முத்துமாலை பற்றிய விவரம் கீர்த்திசிம்மனுக்குத் தெரி யுமா?" என்று கேட்டான். சுசேனனும் "இப்படி ஒருமாலை இருக்கிறது



என்றும் அது எங்கோ மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது என்றும் அவனுக்குத் தெரியும். இதற்குமேல் வேறெதுவும் தெரியாது" என்றான்.

இதற்குப் பின் தன்னருகே இருந்த சிறு தந்தப் பெட்டியை எடுத்து ஜெயசேனனிடம் கொடுத்து "இந்தப் பெட்டியை உன் மகள் பத்திரமாக எடுத்துப் போய் கீர்த்திசிம்மனிடம் கொடுக்க வேண்டும். அதன் பின் நடக்க வேண்டியதை அவர்களே தீர்மானிக்கட்டும்" என்றான்.

ஜெயசேனன் அப்பெட்டியை பயபக்தியுடன் வாங்கி மறைத்து எடுத்துக் கொண்டு தன் வீட்டை அடைந்தான். அன்றிரவு மன்னன் ஏதோ யோசனையில் இருப்பது கண்டு ராணி வைஷ்ணவ தேவி அதன் காரணம் என்ன என்று கேட்டாள்.

சுசேனனும் எல்லாவற்றையும் விவரமாகக் கூறி "சக்திசேனை சாமர்த்தியசாலியே. அவள் சக்தி சாமர்த்தியங்களின் மீது நம்பிக்கை கொண்டதாலேதான் அவளை என் மருமகளாக ஏற்பதாகக் கூறினேன். கீர்த்திசிம்மனுக்கு விவரங்கள் எதுவும் தெரியாது. சக்திசேனையைப் பற்றி அவன் என்ன அபிப்பிராயம் கொள்வானோ. ஒருவேளை நான் கூறியது தவறோ என்றே யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

அதுகேட்டு ராணியும் "ஓ! இது தானா நீங்கள் கவலைப்படுவதற்கான காரணம்! கவலையே வேண்டாம். நம் கீர்த்திசிம்மனிடம் முழு நம்பிக்கை கொள்ளுங்கள். அவன் உங்கள் விருப்பப்படியே நடப்பான். இதில் கொஞ்சமும் சந்தேகமே பட வேண்டாம். இப்போது நான் ஒரு கேள்வி கேட்கிறேன். ஆகாயத்தின் ராஜா ராணி யாரென்று சொல்லுங்கள் பார்க்கலாம்" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள். சுசேனனோ "இதென்ன கேள்வி?" என்றான். எனவே அவள் "இக்கேள்விக்கு நம் மகனும் நமக்கு மருமகளாக வரப் போகிறவளும் விடையளிப்பார்கள்" என்றாள்.

"வரப் போகிற மருமகளா? யார் அவள்?" என்று சுசேனன் கேட்க வைஷ்ணவ தேவியும் "வேறு யார்?

சக்திசேனைதான். அவளை நம் மகன் சிறுவயதிலிருந்தே அறிவானே. அவன் அவளை மறக்கவில்லை. நான் அவனைக் காண குருகுலத்திற்குப் போன போதெல்லாம் அவன் சக்திசேனையைப் பற்றி விசாரித்தே வந்தான். நம் மகனும் நீங்கள் சொல்வதை மீறமாட்டான். சக்திசேனை இப்பரீட்சைக்கு உட்பட்டதால் அவளுக்கு இது சம்மதமே என்று தெரிகிறது. எனவே கவலையை விடுங்கள்" என்றாள். அதுகேட்டு மன்னனும் நிம்மதியாகத் தூங்கச் சென்றான்.

காம்போஜ மன்னன் கருடதத்தன் புதுத் திட்டம் தயாரித்தான். கோசலத்திற்கு வடதிசையிலுள்ள நகதேச மன்னன் நாககர்ணன் கருடதத்தனின் மைத்துனன். அவனையும் சாக்கிய தேச மன்னன் குந்தினவர்மனையும் தன்னோடு சேர்த்துக் கொண்டான். ஏனெனில் தனியாகத் தானே முயன்றதில் கருடதத்தன் தோல்வியைத்தானே கண்டான்!

மூவரும் தம் படைகளோடு போய் கோசலத்தைக் கைப்பற்ற வேண்டும் என்பது பொது திட்டம். கருடதத்தன் அந்த சமயத்தில் மாலையைக் கண்டு பிடித்து அடைய நினைத்தான். நாககர்ணனும், குந்தினவர்மனும் கருடதத்தனும் ஒன்றுகூடிப் பேசினார்கள். கருடதத்தன் முத்துமாலையை எடுத்துக் கொள்வது என்றும் கோசல நாட்டை நாககர்ணனும் குந்தினவர்மனும் சமமாகப் பிரித்து எடுத்துக் கொள்வது என்றும் தீர்மானிக்கப் பட்டது.



ஆனால் மூவரும் ஒருவரையொருவர் ஏமாற்ற நினைத்தனர். கருடதத்தன் மாலையோடு கோசலத்தை அடைய விரும்பினான். நாககர்ணன் குந்தினவர்மனை ஒழிக்கவும், குந்தினவர்மன் நாககர்ணனை ஒழிக்கவும் நினைத்தான்.

நாககர்ணனும் "நம் மூவர் படைகளும் ஒன்று சேர்ந்தால் கோசலப் படைக்குச் சமமாகி விடும். பிறகு என்ன? வெற்றி நமதே" என்றான்.

குந்தினவர்மனும் "குருகுலத்திலிருந்து கீர்த்திசிம்மன் பௌர்ணமிக்கு மறுநாள் கிளம்ப போகிறானாம்.

அவனை வழியிலே மடக்கி ஒழிக் கலாம்" என்றான். கருடதத்தனும் "ஆமாம். அவ்வாறு செய்தால் இள வரசனின் மரணத்தால் கோசல நாடே துயரத்தில் ஆழ்ந்து கிடக்கும். அப்போது திடீர் தாக்குதலை நடத்தி கோசலத்தை எளிதில் கைப்பற்றி விடலாம்" என்றான்.

நாககர்ணனோ "அந்த கீர்த்திசிம் மனைக் கொல்லக்கூடாது. அவனைச் சிறைப்பிடித்து வைத்துக் கொண்டு சுசேனனை மிரட்டி முத்துமாலை யைக் கொடுத்தாலே கீர்த்திசிம்மனை விடுவிப்போம் எனக் கூறலாம்" என்றான்.

குந்தினவர்மனும் "இது சரியா னதே. அந்த மாலை எங்கே இருக் கிறது என்று நமக்குத் தெரியாது. சுசேனனுக்குத் தன் மகன் மீது அலாதி பிரியம். நாம்தான் கீர்த்தி சிம்மனை கொன்றோம் என அறிந் தால் முதல் வேலையாக முத்து மாலை பற்றிய தடயங்களை மறைத்து விடுவான். மகனை உயிரோடு காண அந்த மாலையைக் கொடுத்தேயாக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டால் மாலையை அவன் கொடுத்து மகனை மீட்டுக் கொள்ள நினைப் பான். மாலை நம் கைக்குக் கிடைத்ததும் கீர்த்திசிம்மனை ஒழித்து விடலாம்" என்றான்.

இதற்கு மற்ற இருவரும் "ஆமாம். அப்படித்தான் செய்ய வேண்டும். கீர்த்திசிம்மனைக் கொல்லக் கூடாது. அவனை உயிருடன் பிடித்துப் பணயக் கைதி போல வைத்துக் கொண்டு கோசல மன்னனை மிரட்டி முதலில் சக்தி வாய்ந்த அந்த முத்து மாலையை வாங்கிக் கொள்வோம். அதன் பிறகு நம் திட்டப்படி கோச லத்தைக் கைப்பற்றுவோம்" என்று கூறி குந்தினவர்மன் கூறியதை ஏற்றுக் கொண்டார்கள். உடனேயே சில வீரர்களை கீர்த்திசிம்மன் வரும் வழியில் அவனைத் தாக்கி சிறைப் பிடித்து வர அனுப்பவும் தீர்மானிக் கப்பட்டது

**(தொடரும்)**






# மணத்திற்கு மணம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர இரவில் விடாப்பிடியாக முயல்வதைப் பார்த்தால் நீ எந்தப் பெண்ணின் மீதோ ஆசை கொண்டு இவ்வேலையைச் செய்வதாக நினைக்கிறேன். சில சமயங்களில் இத்தகைய ஆசை முடிவில் நிறைவேறாமல் போவது கூட உண்டு. இதற்கு உதாரணமாக சுந்தர வர்மன் என்ற இளவரசனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

சிருங்காரபுரியை சுத்தோதன வர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது மகன் சுந்தரவர்மன்

## வேதாளம் சொல்லும் கதை



நல்ல அழகன். அறிவாளி சாமர்த்திய சாலியும் கூட. இதனால் அவனுக்குத் தம் மகளைக் கொடுக்கப் பல நாட்டு மன்னர்கள் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள். தம் மகள்களின் உருவப் படங்களை அவர்கள் சிருங் காபுரி மன்னனிடம் அனுப்பினார்கள். ஆனால் அவற்றில் எதுவுமே சுந்தர வர்மனுக்குப் பிடிக்கவில்லை.

சுந்தரவர்மன் அவ்வப்போது ஆஸ்தான ஓவியனான தனஞ்செய னின் ஓவியர் கூடத்திற்குச் சென்று அவர் வரையும் ஓவியங்களைக் கண்டு மகிழ்வான். ஒருநாள் அவன் ஓவியக் கூடத்திற்குச் சென்றபோது தனஞ்செயன் அழகியப் பெண் ஒருத்தியின் உருவப் படத்தில் வண ணம் தீட்டிக் கொண்டிருந்தான். சுந்தரவர்மன் அந்தப் படத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்து "ஆகா! எவ்வளவு அழகான பெண்! இப்படியும் ஒருத்தி உண்மையி லேயே இருக்கிறாளா?" என்று எண்ணி மலைத்து நின்றான்.

சற்று நேரம் கழித்து தனஞ் செயன் திரும்பிப் பார்த்தபோது சுந்தரவர்மன் "மிகமிக அழகாக இருக்கிறாளே. யார் இவள்? உன் கற்பனையில் உதித்தவளா அல்லது இவளை எங்காவது கண்டாயா?" என்று கேட்டான்.

தனஞ்செயனும் சிரித்தவாறே "இவள் இதே ஊரில்தான் இருக் கிறாள். பெயர் பூர்ணிமா. ஒரு ஏழை விவசாயியின் மகள். மணமாகா தவள்" என்று அவளைப் பற்றிக் கூறினான். சுந்தரவர்மனும் "நான் இவளைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்" என்றான்.

சுந்தவர்மனுக்கு அன்றிரவு தூக் கமே வரவில்லை. எங்கு பார்த்தாலும் பூர்ணிமாவின் உருவமே அவன் கண்களில் தென்பட்டது. அதிகாலை யில்தான் அவன் தூங்கினான். அப் போது கண்ட கனவில் ஒரு மந்திர வாதி பூர்ணிமாவை ஒரு புலியின் மீது ஏற்றிக் கடத்திக் கொண்டு போவது போலக் கண்டான். அந்த மந்திரவாதி இளைஞன். கழுத்தில் ஒரு மணி மாலை அணிந்திருந்தான். அது தங்கச் சங்கிலியால் ஆனது.

அதில் ஒரு சிவப்புக் கல் பதிக்கப் பட்டிருந்தது.

புலி வெகு நேரம் ஓடி ஒரு பெரிய ஆலமரத்தடியே போய் நின்றது. மந்திரவாதி கீழே இறங்கி பூர்ணிமாவை இழுத்துக் கொண்டு அருகே இருந்த ஒரு மலை குகைக்குள் சென்றான். சுந்தரவர்மனும் அவர்களைத் தொடர்ந்து வந்து அக்குகைக்குள் அவர்களின் பின்னால் சென்றான்.

இந்த நிலையில் சுந்தரவர்மனின் தூக்கம் கலைந்தது. விடியற்காலையில் காணும் கனவு பலிக்கும் என்பார்களே. அப்படியானால் பூர்ணிமாவை ஒரு மந்திரவாதி கவர்ந்து கொண்டு போய் விடுவானோ என்று அவன் கவலைப்படலானான்.

காலையில் மக்கள் நகர வீதிகளில் கூட்டம் கூட்டமாய் நின்று பூர்ணிமாவை முந்தைய இரவில் மாயநாதன் என்ற மந்திரவாதி தூக்கிக் கொண்டு போய் விட்டதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். இந்தச் செய்தி சுந்தரவர்மனுக்கும் எட்டியது.

மாயநாதன் மந்திரதந்திரங்களில் கை தேர்ந்தவன், மிகவும் கொடியவன். அவன் அணிந்திருந்த மாலை எவரையும் வசீகரித்து இழுத்துப் போய் விடும். என்றும் அவனால் செய்ய முடியாதது என்று எதுவும் இல்லை என்றும் மக்கள் பேசிக் கொண்டார்கள்.

இதையெல்லாம் கேட்ட சுந்தரவர்மன் தான் முன்தின இரவில் கண்ட கன்வை நினைவுப்படுத்திக்





கொண்டான். உடனே அவன் யாரிடமும் சொல்லாமல் தன் குதிரை மீது ஏறிக் காட்டிற்குள் சென்றான்.

உச்சி வேளைக்கு அவன் தான் கனவில் கண்ட ஆலமரம் இருப்பதைக் கண்டு அங்கு சென்றான். அதற்குப் பக்கத்திலேயே மலைக் குகை இருப்பதையும் அவன் கண்டான். குகை வாசலில் ஒரு புலி தூங்கிக் கொண்டிருந்தது. அதன் கழுத்தில் மாயநாதன் அணிந்திருந்த மந்திர மாலை இருந்தது.

சுந்தரவர்மன் சட்டெனத் தன் வாளை உருவிப் புலியை ஒரே குத்தில் கொன்றான். பிறகு அதன் கழுத்திலிருந்த மாலையை எடுத்து தான் அணிந்து கொண்டு அவன் குகைக்குள் சென்றான். அங்கு புலித் தோல் விரிக்கப்பட்ட ஒரு ஆசனத்தில் மாயநாதனும் பூர்ணிமாவும் உட்கார்ந்திருப்பதை அவன் கண்டான்.

அப்போது மாயநாதன் "பூர்ணிமா! நான் என் மந்திர மாலையின் சக்தியால் உன்னை இங்கு கொண்டு வந்து விட்டேன். ஆனால் மந்திர மாலையின் உதவியால் நான் உன்னை மணக்க விரும்பவில்லை. அதனால்தான் அந்த மாலையை வாசலிலுள்ள புலியின் கழுத்தில் போட்டுவிட்டு வந்தேன். அந்த மாலை என் கழுத்தில் இல்லாவிட்டால் நான் ஒரு சாதாரண மனிதனே. நீ சம்மதித்தால் உன்னை அக்கினி சாட்சியாக மணந்து கொள்கிறேன். உனக்கு விருப்பம் இல்லை என்றால் உன்னை உன் வீட்டில் கொண்டு போய் விடுகிறேன்" என்றான்.

இவ்வாறு மாயநாதன் கூறியதைக் கேட்ட சுந்தரவர்மன் ஆச்சரியப்பட்டான். பூர்ணிமா அவனுக்கு என்ன பதில் சொல்லப் போகிறாள் என்பதைக் கேட்க அவர்கள் இருந்த இடத்தின் பக்கம் சென்றான்.

பூர்ணிமா மாயநாதனைப் பார்த்துத் தலைகுனிந்தவாறே " நீங்கள் இந்த மாய மந்திர வேலைகளை விட்டுவிட்டு எல்லோருக்கும் மத்தியில் கௌரவமாக வாழத் தயாரானால் நான் உங்களை மணந்து கொள்கிறேன்" என்றாள்.

மாயநாதன் மகிழ்ந்து போய்

பூர்ணிமாவின் கையைப் பற்றப் போகையில் சுந்தரவர்மன் அவர்களின் முன் போய் நின்றான். அவன் "பூர்ணிமா! இவன் மந்திரவாதி. கொடியவன். தன் மணிமாலையால் உன்னை மயக்கியவன். இவனை மணக்காதே. நான் இந்நாட்டு இளவரசன். என்னை மணந்து கொள்" என்றான்.

பூர்ணிமா இளவரசனின் கழுத்திலிருந்த மாலையைப் பர்த்தாள். மறு நிமிடமே ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவள் போல மெதுவாக நடந்து வந்து சுந்தரவர்மனின் பக்கத்தில் நின்றாள். இதைப் பார்த்த மாயநாதன் பலமாகச் சிரித்தான்.



சுந்தரவர்மன் அவனை எரித்து விடுபவன் போலப் பார்த்தான்" நீ ஏன் இப்படிச் சிரிக்கிறாய்? ஒரு அபலையான பெண்ணை உன் மந்திர சக்தியால் வசீகரித்துக் கவர்ந்து வந்த கயவன் நீ. உன்னைச் சட்டப்படி தூக்கில் போடலாம். ஆனால் உன்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறேன். பிழைத்துப் போ" என்றான்.

அப்போதும் மாயநாதன் சிரித்தவாறே "பேஷ்! மந்திரமாலையால் நான் இவளை வசீகரித்து விட்டேன் என்பதா உன் குற்றச்சாட்டு?" என்று கூறியவாறே சுந்தரவர்மன் கழுத்தில் அணிந்திருந்த மாலையைப் பார்த்தான்.

அதைக் கேட்ட சுந்தரவர்மன் திடுக்கிட்டுத் திகைத்தான். சற்று யோசித்து விட்டு அவன் தான் அணிந்திருந்த மாலையை கழற்றித் தரையின் மீது ஓங்கி அடித்தான். அதிலிருந்த சிவப்புக் கல் சுக்கல் சுக்கலாகிப் போயிற்று.

அதுவரை சுந்தரவர்மனின் பக்கம் நின்றிருந்த பூர்ணிமா அவனைப் பார்த்து நடுங்கியவாறே "யார் நீங்கள்? நான் எப்படி இவர் பக்கம் வந்து நின்றேன்?" எனக் கூறிச் சட்டென ஓடிப்போய் மாயநாதனின் பக்கம் போய் நின்றாள். மறு நிமிடமே சுந்தரவர்மன் அக் குகையிருந்து வெளியே வந்து தன் குதிரை மீதேறித் தலை நகருக்குச் சென்று விட்டான்.

வேதாளம் இக் கதையைக் கூறி

"மன்னனே! சுந்தரவர்மன் மிக அழகி என்று எண்ணி பூர்ணிமாவை மணக்கத் தானே மந்திரவாதியின் குகைக்குள் சென்றான்! இதற்காகப் புலியைக் கொன்று மந்திர மாலையையும் எடுத்து அணிந்து கொண்டானே. அவன் இந்த நிலையில் பூர்ணிமாவைத் தடை எதுவும் இல்லாமல் மணந்து கொண்டிருக்கலாமே. ஆனால் அவ்விதம் செய்யாமல் மந்திரமாலையை எடுத்துத் தரையில் அடித்து அதன் சிவப்புக் கல்லை உடைத்தானே? இதெல்லாம் ஏன்? என் சந்தேகங்களுக்கு நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "மாயநாதனை எல்லோரும் கயவன் எனக் கூறிய போதிலும் அவன் பூர்ணிமாவின் விஷயத்தில் உயரிய பண்போடு நடந்து கொண்டான். ஒரு பெண்ணின் மனதை மந்திர சக்தியால் வெல்லக் கூடாது என்றும் அவளாக விரும்பித் தன்னை மணக்க வேண்டும் என் நினைத்தே மாயநாதன் தன் மந்திர மாலையைப் புலியின் கழுத்தில் அணிவித்து விட்டு குகைக்குள் சென்றான். ஆனால் சுந்தரவர்மன் அந்த மாலையை அணிந்து பூர்ணிமாவை வசீகரித்த போது அவனுக்குச் சிரிப்பு வந்தது. அந்த சிரிப்பின் பொருள் சுந்தரவர்மனுக்கு விளங்கி விட்டது. அந்த மாலையை வேறு எவரும் துஷ்பிரயோகம் செய்யக் கூடாது என நினைத்தே அவன் அதன் கல்லை உடைத்தான். அவன் பூர்ணிமாவின் விருப்பம் என்ன எனத் தெரிந்து கொண்டு விட்டதால் அவளை வற்புறுத்த முடியாது எனத் தெரிந்து கொண்டான். எனவே அவளை மணக்கும் எண்ணத்தை விட்டு விட்டுச் சென்றான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# பெயர்பரவியது

விதர்ப்ப நாட்டு மன்னன் விமலாதித்தன் கொடுங்கோல் மன்னன் அவனது ஆட்சியில் மக்கள் கஷ்டங்களைத்தான் அனுபவித்தனர். விமலாதித்தன் இறக்குமுன் தன் கொடுஞ் செயல்களுக்காக மனம் வருந்தினான்.

இறப்பதற்கு முன் அவன் தன் மகன் கமலாதித்தனை அழைத்து "மகனே! நான் இறந்தபின் மக்கள் என்னை இகழாமல் புகழும்படிச் செய்ய வேண்டியது உன் கடமை. அப்போதுதான் என் ஆத்மா சாந்தி அடையும்" என்று கூறி உயிர் விட்டான்.

கமலாதித்தன் நல்ல குணங்கள் கொண்டவன். தலைநகரில் தன் தந்தையின் பெயரில் இலவச சாப்பாட்டுக் கூடத்தையும் ஒரு பள்ளிக் கூடத்தையும் நிறுவினான்.

சில நாட்களுக்குப்பின் கமலாதித்தன் மாறு வேடத்தில் சாப்பாட்டுக் கூடத்திற்குச் சென்றான். அங்கு நூற்றுக்கணக்கானவர்களுக்கு சாப்பாடு போடப்பட்டும் அவர்களின் முகங்களில் திருப்தி அடைந்த அறிகுறியை அவன் காணவில்லை. ஒருவனிடம் விசாரித்தபோது அவன் "இவ்வளவு நல்ல காரியம் செய்யப்படும் இடத்திற்கு ஏனோ அந்தக் கொடுங்கோல் மன்னனின் பெயரை வைத்திருக்கிறார்களே. அதுதான் மகிழ்ச்சி அளிக்கவில்லை" என்றான்.

இதைக் கேட்ட கமலாதித்தன் மனம் கலங்கியவாறே பள்ளிக் கூடத்தைக் காணச் சென்றான். அங்கு ஆசிரியர்கள் மட்டுமே இருந்தார்கள். ஒரு மாணவன் கூடத் தென்படவில்லை. அதுகண்டு அவன் ஆச்சரியப் பட்டு ஒரு ஆசிரியரிடம் அது பற்றிக் கேட்டான்.

அதற்கு அவர் "ஐயா! கொடுங்கோல் மன்னனின் பெயரிலுள்ள

- சந்தியாகிருஷ்ணன் -

இந்தப் பள்ளியில் தங்கள் குழந்தைகள் படித்தால் அவனைப் போலக் கெட்டவர்களாகி விடுவார்கள் என்று பெற்றோர்கள் பயந்து இங்கு அவர்களை அனுப்பாமல் வேறு பள்ளிகளில் சேர்க்கிறார்கள்" என்றார்.

அதைக் கேட்டு கமலாதித்தன் மனம் உடைந்து போய் அன்றே உணவுக் கூடத்தையும் பள்ளிக் கூடத்தையும் மூடி விட்டான்.

கொஞ்ச காலத்திற்குப் பின் கமலாதித்தன் ஒரு கனவு கண்டான். அதில் விமலாதித்தன் கண்ணீர் வடித்தவாறே தோன்றியதைக் கண்டான். அக்கனவை கமலாதித்தன் தன் அமைச்சரிடம் கூறவே அவரும் "உங்கள் தந்தை தான் இறக்கும் போது கூறியதை நீங்கள் நிறைவேற்ற வேண்டுகிறார் என்பதே அதன் பொருள்" என்றார்.

அன்று முதல் கமலாதித்தன் மக்களுக்குப் பயன்தரும் பல வேலைகளைச் செய்தான். வரிகளைக் குறைத்தான். பாதைகள் போட்டான். எல்லா ஊர்களிலும் இலவசக் கூடங்களை அமைத்தான். இதனால் கமலாதித்தன் புகழ் பரவியது. இந்நிலையில் அமைச்சர் கூறியபடி விமலாதித்தனின் சிலைகள் செய்து தலைநகரிலும் மற்ற ஊர்களிலும் நிறுவினான்.

அதுபற்றி மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என அறிய கமலாதித்தனும் அமைச்சரும் மாறு வேடத்தில் சென்றார்கள். ஒரு ஊரில் அவர்கள் ஒரு அயல்நாட்டவன் அவ்வூர்காரனிடம் "இது யார் சிலை?" என்று விசாரிப்பதைக் கேட்டார்கள். அவனும் "இதுவா? இது கடவுள் போல இருக்கும் எங்கள் மன்னரின் தந்தையின் உருவச்சிலை. அவர் இறந்ததால் தான் எங்களுக்கு இவ்வளவு நல்ல மன்னர் கிடைத்திருக்கிறார்" என்றான்.

இது கேட்டு கமலாதித்தன் தன் தந்தையின் பெயர் அவரது கடைசி நேர விருப்பப்படி பரவுகிறது. என மகிழ்ந்து அமைச்சரோடு தலைநகர் திரும்பினான்.



# அம்புலிமாமா அனுபந்தம் - 69

நம் நாட்டு மரங்கள் :

## தென்னைமரம்




தென்னை மரத்தைக் கற்பகத்தரு என்றும் கூறுவது உண்டு. மகாவிஷ்ணுவின் அவதாரமாய் வந்த பரசுராமர் கொடியவர்களை ஒழித்துவிட்டு கோகர்ணம் என்ற மலையின் உச்சிமேல் நின்று தம் கோடாலியைக் கடலில் விட்டெறிந்தாராம். அந்த கோடாலி சென்ற இடம் தரைப்பகுதி யாகியதாம். பரசுராமர் சுவர்க்க லோகத்திலிருந்து தென்னை நாற்றைக் கொண்டு வந்து அந்நிலத்தில் நட்டாராம். அப்பகுதி கோகர்ணத்திலிருந்து கன்னியாகுமரிவரையாம். இந்நிலப் பரப்பில் தென்னை மரங்கள் பரவலாக வளர அப்பகுதி கேரளம் எனப் பெயர் பெற்றதாம். இப்படி ஒரு கதை மக்களிடையே வழங்கி வருகிறது. கேரளம் என்றால் தென்னை விளையும் பூமி என்றும் பொருள் கூட கூறுகிறார்கள்.

ஹிந்துக்கள் தேங்காயை மிகவும் புனிதப் பொருளாகக் கருதி கடவுளுக்கு அர்ப்பணிக் கிறார்கள். சுபகாரியங்கள் தேங்காய் இல்லாமல் நடப்பது இல்லை.

கடற்கரைப் பகுதிகளில் தென்னை மரங்கள் நன்கு வளர்கின்றன. இதனால் அப்பகுதிகளில் வாழும் மக்களின் வாழ்க்கையும் தென்னையோடு சேர்ந்து பண்டிகைகளிலும் திருவிழாக்களிலும் முக்கிய பங்கு பெறுகிறது. மகாராஷ்டிரத்தில் மழைக்காலம் முடியும்போது நாரியல் திவஸ் என்ற பண்டிகையைக் கொண்டாடி வருணதேவ னுக்கு நன்றி செலுத்தத் தேங்காய்கள் உடைப் பதை இதற்கு ஒரு உதாரணமாகக் கூறலாம்.

கிளைகளே இல்லாமல் 18 மீட்டரிலிருந்து 28 மீட்டர் உயரம் வளரும் தென்னையின் இலைகள் நீண்டு சன்னமாக இருக்கும். மட்டையின் இருபுற மும் நீண்டுள்ள இந்த இலைகள் அதாவது ஓலைகள் 2.5 மீட்டர் நீளமிருக்கும். ஓலையின் நடுவில் ஈர்க்குச்சி இருக்கும். ஓலை முதலில் வெளிர் மஞ்சளாக இருந்து முதிர்ந்ததும் பச்சை நிறமாகி விடும். மட்டைகளிடையே பூக்கள் பூத்துக் காய்கள் குலை குலையாக தொங்கும்.

தென்னை மரம், தேங்காய் எவ்வாறு பயன்படுகின்றன என யாவரும் அறிந்ததே. இள சாக இருக்கும் காய் முதிர்ந்து தேங்காயாக ஆகிறது. தென்னை தேங்காய் எண்ணை, ஓலை, நார், ஓடு எனப் பலவற்றைக் கொடுத்து உதவுகிறது. இதனால் இது வியாபார முறையில் விலையுயர்ந்துள்ளது.




# புனித பைபிள்

கிருஸ்துவர்களின் புனித நூலான பைபிள் பழைய கோட்பாடு (ஓல்ட் டெஸ்டமென்ட்), புதிய கோட்பாடு (நியூ டெஸ்டமென்ட்) என் இரு பகுதிகளாக உள்ளது. பழைய கோட்பாடு மனித இனத்தின் பழங்கால வரலாற்றை விவரிக்கிறது. ஜுடோயிசம் என்ற பழைய மதத்தைத் தழுவிய ஹீப்ரூ மொழி பேசும் யூதர்கள் நம்பும் வரலாறு இது. இதைக் கிருஸ்துவர்களும் வரலாற்றாக ஏற்கிறார்கள். இதன் கதைகளையும் அறிவுரைகளையும் புனிதமாகக் கருதுகிறார்கள்.

புதிய கோட்பாடு ஏசுவின் அறிவுரைகளையும் அவரது நேரடி சீடர்கள் புரிந்த மகத்தான செயல்களையும் பணிகளையும் விவரிக்கிறது.

படைப்பின் ஆரம்பம் பற்றி பழைய கோட்பாடு இவ்வாறு கூறுகிறது. கடவுள் பூஉலகையும் சொர்க்கத்தையும் சிருஷ்டி செய்த போது பூமி எவ்வித உருவிலும் இராமல் தாறுமாறாக மொத்தையாக கருப்பு நிற ஆவி சூழ்ந்து இருந்தது. தெய்வ சக்தியால் அது வடிவம் பெற்றது.

மன்னர்களையும் மகான்களையும் பற்றிப் பழைய கோட்பாடு எண்ணற்ற கதைகளைக் கூறுகிறது. எகிப்தில் அடிமைகளாகப் பிடிக்கப்பட்ட யூதர்கள் பட்ட அவஸ்தைகளையும், அவர்கள் இஸ்ரேலுக்குத் திரும்ப பட்ட இன்னல்களையும் முடிவில் மோசஸ் அவர்களை அங்கு கொண்டு போய்ச் சேர்த்த நிகழ்ச்சியையும் அது விவரிக்கிறது.

பழைய கோட்பாட்டில் இன்னும் எவ்வளவோ அனுபவக் கதைகளும் நீதிக் கதைகளும் உள்ளன. உதாரணத்திற்கு மிகப் பரவலாகத் தெரிந்த ஊதாரி மகன் கதையும் அதில் உள்ளது. ஊதாரித்தனமாகச் செலவு செய்யும் மகன் தன் தந்தையோடு சண்டை போட்டுக் கொண்டு சொத்தில் தன் பங்கை வாங்கிக் கொண்டு பிரிந்து போனான். அவன் பணம் எல்லாம் வீண் டம்பச் செலவில் கரைந்து போக

அவன் பல கஷ்டங்களை அனுபவித்தான். முடிவில் வேறு வழி இல்லாமல் தன் தந்தையின் வீட்டில் வேலைக்காரனாகத் தயாரானான். ஆனால் அவனது தந்தை அவனை அன்புடன் வரவேற்றார். இறந்து போன தன் மகன் உயிர் பெற்று வந்ததாக அவர் கருதினார்.

புதிய கோட்பாட்டில் ஏசுவின் அறிவுரைகள் வரிசையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. எதிரிகளிடம் அன்பு காட்டல், பணிவு, நல்லது செய்யத் துணிவு போன்றவற்றை போதித்தார். யாராவது உன் ஒரு கன்னத்தில் அறைந்தால் நீ உன் மற்ற கன்னத்தையும் காட்டும் அளவிற்குப் பொறுமை வேண்டும் என அவர் அறிவுரை கூறினார். மனிதர்கள் யாவரும் அஞ்ஞானிகள். அதனால் பிறர் செய்கைகளில் நியாய அநியாயம் பார்க்க யாருக்கும் உரிமை கிடையாது என்று அவர் உரைத்துள்ளார்.

அற்புதங்கள் செய்வதாகக் கூறுபவர்களையும், வஞ்சகமாகப் பேசுபவர்களையும் நம்பாமல் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்று அவர் கூறி வந்தார். கடவுளின் மீது முழு நம்பிக்கை கொள்வதே வாழ்க்கையின் பலமான அஸ்திவாரம் என ஏசு உரைத்தார். இப்படிப்பட்டவர் வாழ்வு கருங்கல் அஸ்திவாரத்தில் கட்டப்பட்ட பலமான கோட்டை போலாகும். கடவுள் நம்பிக்கை இல்லாதவர் வாழ்வு மணல் மீது கட்டப்பட்ட வீடுபோலாகும் இது எந்த ஒரு பலத்த காற்று வீசினாலும் அல்லது லேசாக அதிர்ந்தாலும் இடிந்து, விழுந்து விடும்.

உலகிலேயே மிக அதிகமான எண்ணிக்கையில் பிரசுரிக்கப்பட்ட நூல் பைபிளே. கிருஸ்துவர்கள் மட்டுமல்லாமல் பிற மதத்தினரும் இதனைப் படிப்பது இதன் சிறப்பைக் காட்டுவதாகும்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. ஸ்ரீஹரிகோட்டா எங்கே உள்ளது? அது தற்போது எப்படி புகழ் பெற்றது?
2. ஒலிம்பிக் சின்ன ஐந்து வளையங்களின் நிறங்கள் யாவை?
3. நம் நாட்டில் முதலாவது திரை அரங்கம் எங்கு எப்போது கட்டப்பட்டது?
4. நியூயார்க் நகரம் எந்த நதியின் முகத்துவாரத்தில் அமைந்துள்ளது?
5. ஆரிய சமாஜத்தை நிறுவியவர் யார்?
6. உலகிலேயே மிகப் பெரிய சமுத்திரம் எது?
7. ஐ.நா.வின் பொதுச் சபையின் முதலாவது பெண் அக்கிராசனர் யார்?
8. தையல் யந்திரத்தை யார் கண்டு பிடித்தார்?
9. ஜந்தர் மந்திர் என்றால் என்ன? அது எதற்குப் பெயர் போனது?
10. சாதாரணக் குடும்பத்தில் பிறந்த பெண்ணை மணக்க அரச பதவியையே துறந்த ஆங்கில மன்னர் யார்?
11. சாகித்திய அகாதமி, சங்கீத நாடக அகாதமி, லலித கலா அகாதமி ஆகிய மூன்றின் தலைமை அலுவலகங்கள் உள்ள கட்டடத்தின் பெயர் என்ன? அது எங்கே உள்ளது?
12. ஆப்பிரிக்கா கண்டத்தில் மிகப் பெரிய நகரம் எது?
13. ஹாக்கியின் மந்திரவாதி எனப் பெயர் பெற்றவர் யார்?
14. நம் நாட்டில் முதன் முதலாக வெளியான செய்தித்தாள் எது? எங்கிருந்து வெளியாயிற்று.
15. தாதாசாகப் பால்கே விருது முதன் முதலாக யாருக்கு அளிக்கப்பட்டது?
16. மார்க் ட்வைனின் உண்மையான பெயர் என்ன?
17. இந்திய ரிசர்வ் வங்கி எப்போது நிறுவப்பட்டது?

## விடைகள்

1. ஆந்திரப்பிரதேசத்திலுள்ள ஒரு தீவு. ரோகிணி, எஸ்.வி. ராக்கெட்கள் இங்கிருந்து செலுத்தப்பட்டன.
2. நீலம், கருப்பு, சிவப்பு, மஞ்சள், இலைப் பச்சை.
3. எல்பின்ஸ்டன் பிக்சர் பாலஸ், பம்பாய் 1907–ல்
4. ஹட்சன்
5. தயானந்தசரஸ்வதி
6. பசிபிக் மகாசமுத்திரம்
7. விஜயலட்சுமி பண்டிட், 1953–ல்
8. தற்போதைய வடிவில் 1867–ல் எலியஸ் அடிப்படை முறையை. 1790–ல் தாமஸ் செயின்ட் கண்டுபிடித்தார்.
9. ஜெய்ப்பூர் மன்னர் சவாய் மான்சிங் ஜெய்ப்பூரிலும், டில்லியிலும் கட்டிய நட்சத்திர கணித சாலைகள் இந்த இரு ஆராய்ச்சி சாலைகளில் நட்சத்திரங்கள், கிரகங்கள், பற்றி சோதனைகள் நடத்தப் பயன்படுகின்றன.
10. மன்னர் எட்டாவது எட்வர்ட்.
11. ரவீந்திரபவன், புதுடில்லி.
12. எகிப்தின் தலைநகர் கெய்ரோ.
13. நம் நாட்டு தியான்சந்த்.
14. ஹிக்கிஸ் கெஜட். 1779–ல் கல்கத்தாவிலிருந்து.
15. தேவிகாராணி ரோரிக்.
16. சாம்வேல் க்ளெமென்ஸ்.
17. 1935.




# அத்தான் வந்தான்!

இடிகரையில் பரமனும் புஷ்பாவும் புதிதாக மணமான தம்பதிகள். புஷ்பா சற்று வசதியான குடும்பத்தில் பிறந்தவள். பெற்றோரின் ஒரே மகளாதலால் செல்லமாக வளர்ந்தவள். அவளைப் பார்த்த உறவினர்களெல்லாம் 'என் கண்ணு என் ராஜாத்தி' என்று கொஞ்சி தின்பண்டங்களைக் கொடுத்து வந்தார்கள். அதனால் அவள் கொஞ்சம் அதிகமாகவே எதையும் சாப்பிடும் பழக்கத்தைக் கொண்டாள்.

கல்யாணமாவதற்கு முன் பரமன் தானே சமைத்துச் சாப்பிட்டு வந்தான். எனவே புஷ்பா குடித்தனம் செய்ய வந்ததும் அவன் எந்த சாமான் எங்கே வைக்கப்பட்டுள்ளது என்பதைக் கூறி" இதோ பார். இந்த அரிசி டப்பாவில் ஆழாக்கு உள்ளது. அதால் இரண்டு ஆழாக்கு அரிசி எடுத்து சாதம் சமைத்தால் நம் இருவருக்கும் போதும். நான் தனியாக இருந்தபோது ஒரு ஆழாக்கு அரிசிதான் போட்டேன்" என்றான்.

புஷ்பாவும் ஒரு வாரத்திற்கு தன் கணவன் கூறியபடி சமைத்தாள். ஆனால் அவளுக்கு வயிறு நிறையச் சாப்பிடக் கிடைக்கவில்லை. அதனால் ஒரு நாளிரவு பரமன் நன்கு தூங்கிக் கொண்டிருந்தபோது புஷ்பா எழுந்து சமையறைக்குப் போய் பாயசம் வைத்து சாப்பிட்டாள்.

அது முதல் தினமும் தன் கணவன் இரவில் தூங்கியபின் புஷ்பா எழுந்து சமயலறைக்குப் போய்த் தனக்குப் பிடித்தமான உணவைத் தயாரித்து சாப்பிட்டு வந்தாள். ஒரு நாளிரவு அவள் சர்க்கரைப் பொங்கல் செய்து அதை ஒரு இலையில் கொட்டி சூடு ஆறட்டும் என நினைத்து பாத்திரங்களைக் கழுவ கொல்லைப்புற கிணற்றடிக்குச் சென்

-சுவாமி சங்கரன்-



டம் "என் கணவர் வரப்போகிறார். அவர் உன்னை அடித்து நொறுக்கி விடுவார். நீ சட்டென அந்த இலை முன் உட்கார்ந்து கொள்" என்று கூறி ஒரு பலகையைப் போட்டு சர்க்கரைப் பொங்கல் வைக்கப்பட்ட இலைமுன் உட்கார வைத்தாள்.

திருடனும் எதிர்பேச்சு பேசாமல் இலைமுன் உட்கார்ந்தான். அப்போது பரமன் அங்கு வரவே புஷ்பா "இவர் என் அண்ணா. என் திருமணத்தின் போது வரமுடியாததால் இப்போது வந்திருக்கிறார்" என்றாள். திருடனும் "ஆமாம். நான் வேண்டாம் என்ற போதிலும் சர்க்கரைப் பொங்கலை இவள் செய்து போட்டு விட்டாள்" என்றான்.

இதே சமயம் வாசல் கதவை யாரோ தட்டவே பரமன் போய்க் கதவைத் திறந்தான். அங்கு நின்ற இரு ,காவல் வீரர்கள் "இங்கே யாராவது திருடன் ஓடி வந்தானா?" என்று கேட்டார்கள். பரமனும் "இல்லையே. என் மைத்துனர்தான் வந்திருக்கிறார். என் மனைவி அவருடன் பேசிக் கொண்டிருக்கிறாள்" என்றான். காவல் வீரர்கள் மேற்கொண்டு எதுவும் கேட்காமல் சென்று விட்டார்கள்.

பரமன் வாசல் கதவைத் தாளிட்டு விட்டு உள்ளே வந்ததும் புஷ்பா "என் அண்ணன் அவசரமாகப் போக வேண்டும். உங்களைப் பார்த்தாயிற்று. இனிப் புறப்படுவதாகக் கூறு

றாள். அவள் திரும்பி சமையலறைக்கு வந்தபோது அங்கு ஒரு ஆள் நின்று கொண்டிருப்பது கண்டு பயந்து போனாள்.

அவனும் "நான் பக்காத் திருடன். கத்தினால் ஒரே குத்தில் உன்னைக் கொன்று விடுவேன்" என்று மிரட்டினான். சமையலறையில் ஏதோ சத்தம் கேட்டதால் படுக்கையறையில் தூங்கிக் கொண்டிருந்த பரமன் விழித்துக் கொண்டு "புஷ்பா! அங்கே என்ன சத்தம்?" என்று கேட்டான்.

கணவன் விழித்து எழுந்தது கண்ட புஷ்பா தான் அவனுக்குத் தெரியாமல் உணவு தயாரித்து சாப்பிடுவது தெரிந்து விடுமே எனப் பயந்தாள். அதனால் அவள் திருடனி

கிறார்" என்றான். பரமனோ "முதல் தடவையாக என் மைத்துணர் வந்திருக்கிறார். இப்படியா அனுப்புவது? கூடாது. முன்புற அறையில் கட்டிலைப் போடு. அவர் போவது பற்றி நாளை பேசலாம்" என்றான்.

புஷ்பா முன் அறையில் கட்டிலைப் போட்டு விட்டுத் திருடனிடம் "உன்னை என் கணவரிடமிருந்து காப்பாற்றி விட்டேன். நீ எதையும் திருடாமல் நாங்கள் தூங்கியபிறகு வாசல் கதவைத் திறந்து கொண்டு போய் விடு. மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறிவிட்டுப் படுக்கை அறைக்குச் சென்றாள்.



அவள் படுத்துத் தூங்கிக் கண் விழித்த போது நன்கு விடிந்து விட்டது. பரமன் இன்னமும் விழித்துக் கொள்ளவில்லை. அவள் எழுந்து முன்புற அறையைப் பார்த்தாள். அங்கு திருடன் இருக்கவில்லை. ஒருவாறு திருப்தி அடைந்த அவள் பெட்டிகள் வைக்கப்பட்டிருந்த அறைக்குப் போனால் அங்கு எல்லாம் பொருள்களும் சிதறி விழுந்து கிடந்தன.

அவள் ஆவென அலறவே பரமன் என்ன என்ன என்று கேட்டவாறே ஓடி வந்தான். அப்போது புஷ்பா "அந்தத் திருடன் நம் பொருள்களை எல்லாம் எடுத்துக் கொண்டு போய் விட்டானே" என்று கூறிப் புலம்பினாள். பரமனும் "அந்த திருடனா? அப்படியானால் அவன்..." என்று இழுக்கவே புஷ்பாவும் "நேற்று வந்தவன் என் அண்ணன் இல்லை. பக்காத் திருடன். நான் மூளைகெட்டு திருட்டுத்தனமாகச் செய்து வந்த செயலை மறைக்கப் பொய் சொன்னேன். அது இப்படி முடிந்தது" என்று கூறி தான் தினமும் உணவு தயாரித்து உண்டதையும் முன் இரவு சர்க்கரைப் பொங்கல் செய்த விவரத்தையும் கூறினாள்.

பரமனும் "சரி. சரி. வருத்தப் படாதே நம் வீட்டிலிருந்து ஒரு துரும்பு கூடக் காணாமல் போகவில்லை. இது அந்தத் திருடன் எழுதி வைத்து விட்டுப் போன கடிதம். இதைப் படி" என்று கடி

தத்தை புஷ்பாவிடம் கொடுத்தான்.

அக்கடிதத்தில் திருடன் "எனக்கு வேலை எதுவும் கிடைக்காததால் திருடுவது என நினைத்து முதல் தடவையாக உங்கள் வீட்டில் திருட வந்தேன். காவல் வீரர்கள் வந்த போது நடுநடுங்கினேன். உங்கள் மனைவி தான் திருட்டுத்தனமாகச் செய்வதை மறைக்க என்னைத் தன் அண்ணனாகக் கூறினாள். அதனால் நீங்கள் காவல் வீரர்களிடம் என்னை உங்கள் மைத்துனன் எனக் கூறி அனுப்பி விட்டீர்கள். உங்கள் மனைவி செய்யும் ஒரு சிறு திருட்டு வேலைக்கு இவ்வளவு சிரமப்பட வேண்டும் என்றால் நான் செய்ய விருந்த திருட்டிற்கு எவ்வளவு கஷ்டப்பட வேண்டி வருமோ? திருடிப் பிழைப்பதால் மனதில் நிம்மதி இராது என்று எனக்குத் தெரிந்து போயிற்று. அதனால் உடல் வளைய உழைத்து கிடைக்கும் ஊதியத்தில் திருப்தியுடன் வாழத் தீர்மானித்து விட்டேன். நான் மாறியது போல என் சகோதரியும் மாற வேண்டும்" என்று எழுதி இருந்தான்.

புஷ்பா கடிதத்தைப் படித்து விட்டு கண்ணீர் உகுத்தவாறே "நான் செய்த தவறை மன்னிப்பீர்களா?" என்று கேட்டாள். பரமனும் "மன்னிப்பு எதற்கு? உன் விருப்பம் என்ன என்பதை நான் அறிந்து கொள்ளவில்லை. நீ அதை நிறைவேற்றிக் கொள்ள முயன்றாய். உன் நகைகள், புடவைகளெல்லாம் பத்திரமாக அதோ இருக்கிறது பார். நான் உனக்கு முன் கண் விழித்து எழுந்து போய்ப் பார்த்த போது திருடன் இருக்கவில்லை. இந்தக் கடிதம்தான் இருந்தது. சரி! உன் இஷ்டப்படி சமைக்கவிடாதது என் தவறு. தவிர இனி உன் இஷ்டம் போல சமைத்து எனக்கும் போடு. எனக்கும் சந்தோஷமே" என்றான்.

தன் கணவன் தன்னைக் கோபித்துக் கொள்ளாமல் தன் இஷ்டப்படி செய்யச் சொன்னது கேட்டு அவள் மகிழ்ந்தே போனாள்.





# மாப்பிள்ளை யாரோ?

மலையூரில் மருதப்பர் என்ற விவசாயி இருந்தார். அவர் பெரும் பணக்காரர் அல்ல. எல்லோருக்கும் உதவி நன்மைகளைச் செய்து வந்ததால் அவ்வூர் பணக்காரர்களை விட அவருக்குத்தான் புகழ் அதிகமாக இருந்தது. எல்லோரும் மிகுந்த மரியாதை செலுத்தி வந்தார்கள்.

ஒருமுறை மருதப்பர் தம் ஊரிலிருந்து அடுத்துள்ள நகரத்திற்குச் செல்ல வேண்டி இருந்தது. போகும் வழியில் ஒரு ஆறு இருந்தது. அதில் வெள்ளம் வந்து விட்டால் கடக்க முடியாது. சுற்றுப்பாதையில் ஐந்து மைல் தூரத்திலுள்ள பாலம் வழியாகத்தான் போய் வர வேண்டும்.

மருதப்பர் நகருக்குப் போன போது ஆற்றில் அதிக நீர் இருக்கவில்லை. அதனால் எளிதில் கடந்து நகருக்குச் சென்று விட்டார். ஆனால் திரும்பும்போது சுற்று வழியாகத்தான் வரவேண்டியதாயிற்று. எனவே அவர் தம் ஊருக்குப் போக ஒரு வாடகை வண்டி பேசலானார். வண்டிக்காரனும் அவர் சொன்ன வாடகைக்கு வரத் தயாரானான்.

அப்போது ஐம்பது வயது மதிக்கத்தக்கவரும் விலையுயர்ந்த ஆடைகளும் அணிந்த ஒருவர் வந்து "என்ன முருகா! மலையூர் போக வேண்டும். வருகிறாயா?" என்று கேட்டார். வண்டிக்கார முருகனும் "இவர் மலையூர் போக வண்டி பேசி விட்டார். தாங்கள் இவருடன் வண்டியில் போகச் சம்மதித்தால் ஏறிக் கொள்ளலாம்" என்றான். மருதப்பரும் "வாருங்கள் எனக்கும் பேச்சுத் துணை ஆயிற்று" என்று கூறி அவரை வண்டியில் ஏறிக் கொள்ளச் சொன்னார்.

அந்தப் பணக்காரரும் "மலையூருக்கு நான் கல்யாணம் பேசப்

-கி. அருணா-

போய்க் கொண்டிருக்கிறேன். என் பெயர் மாணிக்க வாசகம். இவ்வூரில் எனக்கு பெரிய கடை இருக்கிறது. வியாபாரமும் நன்றாக நடக்கிறது. உங்கள் ஊரில் சிவசங்கரன் என்ற பெரிய பணக்காரர் இருக்கிறாராமே. அவர் மகனை என் மகளுக்கு மணம் செய்து வைக்கலாம் என்ற நோக்கத்தோடு உங்கள் ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். அவர் எப்படிப்பட்டவர்?" என்று கேட்டார்.

அதற்கு மருதப்பரும் "ஐயா! கல்யாண விஷயத்தில் பிறர் சொல்வதைக் கேளாமல் நேரில் போய்ப் பார்த்து விவரம் தெரிந்து கொள்வதே நல்லது. நான் எதுவும் சொல்லக் கூடாது. ஏனென்றால் எனக்கும் விவாக வயதில் ஒரு மகன் இருக்கிறான். நீங்கள் சிவசங்கரனோடு பேசி ஒருவேளை திருமணம் நிச்சயிக்கப்படாமல் போனால் இந்த மருதப்பன் சொல்லித்தான் நின்று விட்டது என்று அவர் நினைத்தால் என்ன ஆவது?" என்றார்.

மருதப்பரின் நல்ல மனதைப் புரிந்து கொண்ட மாணிக்கவாசகம் மேற்கொண்டு எதுவும் கேட்கவில்லை. சற்று நேரத்தில் வண்டியும் மலையூர் எல்லைக்கு வந்து விட்டது. அப்போது ஒருவன் ஒரு கிழ எருதை இழுத்துக் கொண்டு மலைக்காட்டின் பக்கம் போவதை மருதப்பர் கண்டார்.

உடனே அவர் "ஏய் குப்பா! ஏன் கிழமாட்டை இப்படி இழுத்து கொடுமைப்படுத்துகிறாய்? உன் எஜமானர் சிவசங்கரன் பார்த்தால் என்ன



நடக்கும் தெரியுமா?" என்று கேட்டார்.

குப்பனும் மருதப்பரை வணங்கி "ஐயா! இதை எஜமானர்தான் இழுத்துப் போய் காட்டில் விட்டுவிடச் சொன்னார். இது கிழடாகி விட்டதாம். வேலைக்குப் பயன்படாதாம். இதற்குத் தீனிபோடுவதும் தண்டமாம்" என்றான். அதைக் கேட்ட மருதப்பர் "அட பாவமே! இத்தனை நாளாக இது உழைத்ததே. கிழடாகி விட்டதால் விரட்டி விட வேண்டுமா! காட்டில் விட்டால் இதை ஓநாயோ, புலியோ கொன்று விடுமே. என் மாட்டுக் கொட்டிலில் கொண்டு போய்க் கட்டு. நான் தீனி போட்டு கவனித்துக் கொள்கிறேன். பயப்படாதே. நான் சிவசங்கரனிடம் சொல்லிக் கொள்கிறேன்" என்றார்.

குப்பனும் அவர் சொன்னபடி அவரது மாட்டுக் கொட்டிலுக்கு அந்தக் கிழ மாட்டை ஓட்டிச் சென்றான்.

மருதப்பர் தம் வீட்டு வாசலில் வண்டியிலிருந்து இறங்கியபோது அவர் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த கிழவர் எழுந்து வந்து "மருதப்பா! என் இரண்டு மகன்களும் என்னை வீட்டை விட்டு விரட்டி விட்டார்கள். அதனால் இங்கு வந்து விட்டேன். நீ என்னைக் கை விடமாட்டாய் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்றார்.

மருதப்பரும் "இதென்ன பேச்சு அண்ணா! நீங்கள் வேறு நான் வேறா! இது உங்கள் வீடுதானே. தாராளமாக இங்கேயே இருக்கலாம்" என்று கூறிவிட்டு வண்டியிலிருந்த



மாணிக்கவாசகரிடம் "ஐயா! நீங்கள் என் வீட்டிற்குள் வந்து சற்று இளைப்பாறி தாகசாந்தி செய்து கொண்டு பிறகு சிவசங்கரனின் வீட்டிற்குப் போகலாம். இந்தக் கிழவர் சிவசங்கரனின் தந்தை. அவர் இவரது மூத்த மகன்" என்றார்.

மாணிக்க வாசகரும் இறங்கி அந்த வீட்டினுள் மருதப்பரோடு சென்றார். அப்போது மருதப்பனின் மகன் தன் தந்தையிடம் "வந்து விட் டீர்களா அப்பா! பெரியப்பாவிடம் எவ்வளவு கெஞ்சியும் நீங்கள் வந்த பிறகே வரப்போவதாகப் பிடிவாத மாகக் கூறி விட்டார். இந்தக் கிழவ ரைத்தான் அவரது இருமகன்களும் வீட்டை விட்டு விரட்டி விட்டார்கள்" என்றான்.

இதையெல்லாம் கண்ட மாணிக்க வாசகம் வண்டிக்காரனை இருக்கச் சொல்லிவிட்டு மருதப்பர் கொடுத்த நீர்மோரை வாங்கிக் குடித்துவிட் டுச் சற்று இளைப்பாறினார். பிறகு அவர் வண்டிக்காரனைக் கூப்பிட்டு "முருகா, இன்னும் சற்று நேரத்தில் ஊருக்குப் போகலாம். நான் அந்தப் பெரிய மனிதன் சிவசங்கரனின் வீட்டிற்குப் போகவில்லை. ஆனால் என் மகளுக்கு ஏற்றவனைப் பார்த் தாகிவிட்டது" என்றார்.

அது கேட்டு மருதப்பர் ஆச்சரியப் பட்டார். அப்போது மாணிக்கவாசகம் முருகனிடம் "கிழமாடும் கிழவரும் வயதாகி விட்ட காரணம் காட்டி ஈவிரக்கம் இல்லாத அந்த சிவசங் கரன் வீட்டின் என் மகள் எப்படி வாழ முடியும்? நான் அந்த சிவசங்க ரன் பெரிய பணக்காரன். எனக்கு சம அந்தஸ்து உடையவன் என்று எண்ணினேன். ஆனால் பெரும் பணக்காரராக இல்லாது போனாலும் இரக்கமும் தாராள மனப்பான்மை யும் கொண்ட இந்த மருதப்பர் குடும்பமே அதை விட மேல். இவரது மகனுக்கே என் மகளை மணம் செய்து வைக்க முடிவு செய்து விட் டேன். இங்குதான் அவள் சுகமாக வாழ்வாள்" என்றார்.






ஜெனமேஜெயன் தன் தந்தை பரீட்சித்து எவ்வாறு இறந்தான் எனத் தெரிந்து கொண்டான். அவன் அரியாசனம் ஏறியதும் அமைச்சர்கள் அவனுக்கு காசி மன்னனின் மகள் வபுஷ்டியை மணம் செய்து வைத்தார்கள்.

உதங்கர் கூறியபடி தட்சகனையும் அவனது வம்சத்தவர்களான பாம்புகளையும் ஒழித்துப் பழிதீர்த்துக் கொள்ள சர்ப்பயாகம் செய்வதே சரி என அமைச்சர்கள் கூறவே ஜெனமேஜெயனும் அந்த யாகத்தைச் செய்ய முடிவு செய்தான்.

அதுவரை யாருமே சர்ப்பயாகம் செய்ததில்லை என்றும் அவனே முதல் முதலாகச் செய்வதாகவும் கூறி முனிவர்களும் புரோகிதர்களும் அந்த யாகத்திற்கான பொருள்களைச் சேர்க்கலானார்கள். அப்போது எதிர் காலத்தைப் பற்றி நன்கு அறிந்த சூதர் "இந்த யாகம் முடிவடையாமல் ஒரு பிராம்மணன் தடுத்து விடுவான்" என்றார்.

ஜெனமேஜெயன் அந்த யாகத்தை செய்து முடிப்பதாகக் கூறி சூதரை யாக சாலைக்குள் வரவிட வேண்டாம் என்றும் கட்டளை இட்டான். பிறகு ஜெனமேஜெயன் தன் மனைவியோடு பீடத்தில் அமர்ந்து யாகம் செய்ய ஆரம்பித்தான்.

யாககுண்டத்தில் எங்கெல்லாமோ இருந்த பாம்புகள் எல்லாம் வந்து விழலாயின. லட்சக் கணக்கில் பாம்பு



கள் அழிவது கண்டு தட்சகன் பயந்துபோய் இந்திரனிடம் சரண் புகுந்தான். இந்திரனும் அவனைக் காப்பாற்றுவதாக வாக்களித்தான்.

பாம்புகள் அழிவது கண்டு வாசுகி பயந்து தன் தங்கையான ஜரதார்க்கையிடம் சென்று "இப்படி நடக்கக் கூடாது என்றுதானே உன்னை ஜரதார்க்கர் என்ற முனிவருக்கு மணம் செய்து வைத்தேன். உன் மகன் அஸ்திகனை அனுப்பி அந்த யாகத்தை உடனே நிறுத்தும்படிச் செய்" என்றான்.

தன் தாயின் சொற்படி அஸ்திகன் யாகம் நடக்கும் இடத்திற்குப் போய் மந்திரங்கள் ஓதி மன்னனையும் முனிவர்களையும் ரித்விக்குகளையும் வெகுவாகப் புகழ்ந்தான். ஜனமே ஜெயன் மகிழ்ந்துபோய் அஸ்திகனை அழைத்து அவனைப் பாராட்டி "இவ்வளவு இளம் வயதில் உனக்கு எவ்வளவு அறிவு! நீ விரும்புவதைக் கேள். நான் தவறாமல் கொடுக்கிறேன்" என்றான்.

அஸ்திகனும் உடனே மன்னன் சர்ப்பயாகத்தை நிறுத்திவிட வேண்டுமென வேண்டினான். ஜனமே ஜெயன் அதைத் தவிர வேறு ஏதாவது கேட்கச் சொல்லியும் அஸ்திகன் இணங்கவில்லை. எனவே ஜனமே ஜெயன் தான் வாக்களித்துபடி சர்ப்ப யாகத்தை நிறுத்தினான்.

அப்போது அங்கு வந்தவர்களுக்கெல்லாம் தட்சணை கொடுத்து வேத வியாசரின் சீடரான வைசம்பாயனர் வாயிலாகத் தன் முன்னோர்களைப் பற்றிய விவரங்களை அவன் தெரிந்து கொண்டான்.

பரதவம்சத்தின் ஆதிபுருஷர் வைவஸ்வதமனு. அவர் அதிதியின் பேரன். வைவஸ்வதரின் மகளான இலாவிற்கு புரூருவசு பிறந்தான். புரூகுவசிற்கும் ஊர்வசிக்கும் பிறந்த ஆறு மகன்களில் ஆயு என்பவனுக்கு நான்கு மகன்கள் பிறந்தார்கள். அவர்களில் நகுஷன் ஒருவன். அவன் நூறு யாகங்கள் செய்து சிறிது காலம் இந்திரப் பதவியும் பெற்றிருந்தான். நகுஷன் ஆறு மகன்களைப் பெற்றான். அவர்களில் இரண்டாவது மகன் யயாதி. மூத்தவனான

யதி தவம் செய்யப் போய் விடவே யயாதி மன்னனானான்.

யயாதி ஆட்சி புரிகையில் சுக்கிராச்சாரியார் அசுரர்களின் குருவாக இருந்தார். அவருக்கு மிருத சஞ்சீவினி என்ற மந்திரம் தெரிந்திருந்ததால் அதைக் கொண்டு தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையில் போர் நடந்தபோதெல்லாம் இறந்த அசுரர்களை உயிர்ப்பித்து வந்தார். தேவர்கள் தம் குரு பிரகஸ்பதியின் மகனான கசனை அம்மந்திரத்தைக் கற்க சுக்கிராச்சாரியாரிடம் அனுப்பினார்கள்.

கசன் சுக்கிரன் சீடனானான். மேலும் சுக்கிரரின் மகள் தேவயானியின் அன்பிற்குப் பாத்திரமானான். அசுரர்களுக்கு கசன் யாரென்றும் எதற்காக வந்திருக்கிறான் என்றும் தெரிந்து விட்டது. ஒரு முறை கசன் சுக்கிரரின் மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கையில் அசுரர்கள் அவனைக் கொன்று துண்டுகளாக்கி ஓநாய்களுக்கு இரையாகப் போட்டார்கள். தேவயானி இதை அறிந்து தன் தந்தையை வேண்டி அவரை மிருத சஞ்சீவினி மந்திரத்தைப் பிரயோகம் செய்ய வைத்து கசனை உயிர் பெற்று வரச் செய்தாள்.

மற்றொரு முறை அசுரர்கள் கசனைக் கொன்று கடலில் எறியவே தேவயானி மீண்டும் தன் தந்தையை வேண்டி கசனை உயிர் பெற்று வரச் செய்தாள்.

மூன்றாவது முறையில் அசுரர்கள்



கசனைக் கொன்று அவனது உடலை எரித்து அதன் சாம்பலை எடுத்து மதுவில் கரைத்து சுக்கிராச்சாரியாரைக் குடிக்க வைத்தார்கள். கசனைக் காணாது தேவயானி தவித்து அவன் அசுரர்களால்தான் கொல்லப்பட்டிருக்க வேண்டும் எனத் தன் தந்தையிடம் கூறி அவனை உயிர்பிக்கும்படி வேண்டினாள்.

சுக்கிராச்சாரியார் தம் மந்திர பலத்தால் கசன் எங்கிருக்கிறான் எனக் கண்டறிந்தார். அவன் தன் வயிற்றில் இருப்பதை அறிந்த அவர் "கசா! உனக்கு மிருத சஞ்சீவினியை உபதேசிக்க அசுரர்களே வாய்ப்பை ஏற்படுத்தி விட்டார்கள். நான் உனக்கு முதலில் மந்திரத்தை உபதேசிக்

கிறேன். பிறகு உன்னை உயிர்ப்பிக்கிறேன். நீ என் வயிற்றை கிழித்துக் கொண்டு வெளிவர அப்போது நான் இறந்து விடுவேன். நீ அப்போது என்னை உயிர்ப்பித்து விடு" என்றார்.

அதன் பிறகு சுக்கிரர் தம் வயிற்றினுள்ளிருந்த கசனுக்கு மந்திரோபதேசம் செய்தார்.

அதன்பின் கசன் உயிர்பெற்று வந்து இறந்த சுக்கிரரை உயிர்ப்பித்தான். கசன் வந்த வேலை முடிந்தது. எனவே அவன் சுக்கிரரிடன் விடை பெற்றுக் கொண்டு கிளம்பலானான்.

அப்போது தேவயானி "உன் பேரில் கொண்ட அன்பினால் தானே உன்னை மூன்று தடவைகளிலும் உயிர்பெறச் செய்தேன். நீ என்னை மணந்து கொள்ள வேண்டும்" என்றான். கசனோ "நான் உன் தந்தையின் வயிற்றிலிருந்து வெளிவந்தவன். எனவே நீ எனக்கு சகோதரி. உன்னை நான் மணக்க முடியாது" என்றான்.

அதனால் கோபம் கொண்டு தேவயானி "உனக்கு மிருத சஞ்சீவினி பயன்படாது போகட்டும்" என்று சபித்தாள். கசனும் "பரவாயில்லை. உன்னை எந்த பிராம்மணனும் மணக்காமல் போகட்டும்" என்று எதிர் சாபம் கொடுத்து விட்டுப் போனான்.

அசுரர்களின் மன்னன் விருஷபர்வன். அவனது மகள் சர்மிஷ்டை. அவளும் தேவயானியும் அவளது



தோழிகளும் ஒருநாள் ஆற்றில் குளிக்கச் சென்றனர். கரையில் அவர்கள் தம் ஆடைகளை வைத்து விட்டுக் குளித்துக் கரை ஏறியபோது எல்லோரும் தம் ஆடைகளை எடுத்து உடுத்திக் கொண்டார்கள். ஆனால் சர்மிஷ்டை தவறுதலாக தேவயானியின் ஆடைகளை எடுத்து அணிந்து கொண்டுவிட்டாள்.

அது கண்டு தேவயானி கோபம் கொண்டு "என் ஆடைகளையா எடுத்து உடுத்திக் கொண்டாய்? உன் உடைகளை நான் தொடமாட்டேன்" என்றாள். அதற்கு சர்மிஷ்டை "இந்த ஆடை உனக்கு எப்படி வந்ததாம்? என் தந்தை உன் அப்பனுக்குப் போட்ட பிச்சைக்காசில் தானே வந்



தது?" என்று ஏளனமாகக் கேட்டாள்.

தேவயானி ஆத்திரம் கொண்டு "யார் பிச்சைக்காரன்? உன் அப்பன் தான். அவன் என் தந்தை முன் கை கட்டி நின்று அசுரர்களுக்கு உயிர்ப் பிச்சை கேட்கிறானே!" என்றாள். இதைக் கேட்ட சர்மிஷ்டை தேவயானியை இழுத்துப்போய் ஒரு கிணற்றில் தள்ளிவிட்டுத் தன் தோழிகளோடு போய்விட்டாள்.

சற்று நேரத்திற்குப் பின் யயாதி அந்த வழியே வந்தான். அவன் ஒரு கிணற்றிலிருந்து யாரோ முனகுவது கேட்டு ஓடிப்போய் தன் வலக் கையை நீட்டி தேவயானியைக் கிணற்றிற்கு வெளியே கொண்டு வந்தான். அவளும் தன் வலக்கையால் அவனது கையைப் பற்றிக் கொண்டு வெளியே வந்தாள்.

தேவயானி தான் யாரென்றும் அக்கிணற்றில் எவ்வாறு தள்ளப் பட்டாள் என்றும் யயாதியிடம் கூறினாள். அப்போது அவளைத் தேடிக் கொண்டு அவளது தோழி வரவே தேவயானி அவனிடம் "நான் இனி விருஷ பர்வனின் நகருக்கு வரமாட்டேன். சர்மிஷ்டை எனக்குச் செய்த அவமானத்தை நீயே என் தந்தையிடம் கூறு" எனச் சொல்லி அனுப்பினாள்.

தகவல் தெரிந்து சுக்கிரர் ஓடி வந்தார். தேவயானியின் பிடிவாதம் கண்டு அவர் "சரி, நானும் அந்த நகருக்குப் போகவில்லை. உன்னோடு இருந்து விடுகிறேன்" என்றார். இதற்குள் விருஷ பர்வனுக்கு விஷயம் தெரிய அவன் ஓடிவந்து அவர்களிடம் நகருக்கு வரும்படி வேண்டினான்.

சுக்கிரர் "நீ செய்தது அநியாயம். என் சீடனை அசுரர்கள் மும்முறை கொன்றார்கள். இப்போது என் மகளை உன் மகள் அவமதித்து கிணற்றில் தள்ளிவிட்டாள். எனவே இனி நாங்கள் உன்னோடு இருக்க மாட்டோம்" என்றார்.

விருஷபர்வன் சுக்கிரரின் கால்களில் விழவே அவர் "என்னிடம் வேண்டிப் பயனில்லை. தேவயானியின் விருப்பமே என் விருப்பம்" என்றார். தேவயானியும் "சர்மிஷ்டையும் அவளது தோழிகளும் எனக்குப்

பணிப் பெண்களாக இருப்பதானால் நகருக்கு நாங்கள் வருகிறோம்" என்றாள். விருஷபர்வன் அதற்கு இணங்கினான். சர்மிஷ்டை தேவயானியின் பணிப்பெண்ணாகி அவளது கடுஞ் சொற்களைச் சகித்துக் கொண்டாள். எல்லாம் அசுரகுலத்தின் நன்மைக்காக என அவள் எண்ணினாள்.

ஒரு நாள் தேவயானி சர்மிஷ்டையுடன் ஆற்றில் நீராடச் சென்று விட்டு முன் யயாதியைக் கண்ட கிணற்றருகே வந்தாள். அப்போது யயாதியும் அங்கு வந்தான். தேவயானியும் "நீங்கள் இதற்கு முன் என் கையைப் பற்றிக் கிணற்றிற்கு வெளியே என்னை எடுத்து விட்டீர்கள். அன்றே நீங்கள் என் கணவராகி விட்டீர்கள். நான் சுக்கிராச்சாரியாரின் மகள். இவள் சர்மிஷ்டை விருஷபர்வனின் மகள்" என்றாள்.

பிராம்மணரான சுக்கிரரின் மகளை க்ஷத்திரியனான தான் எப்படி மணக்க முடியும் என்று யயாதி தயங்கினான். ஆனால் சுக்கிரர் அதற்குத் தடை ஏதும் இல்லை என்று கூறவே யயாதிக்கும் தேவயானிக்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. தேவயானி சர்மிஷ்டையுடனும் இரண்டாயிரம் பணிப்பெண்களுடனும் அசுரர்கள் கொடுத்த ஏராளமான பரிசுகளுடன் யயாதியின் அரண்மனைக்குச் சென்றாள்.

சர்மிஷ்டையும் பணிப்பெண்களும் தங்கி இருக்க யயாதி தனி இடத்தைக்



கொடுத்தான். தேவயானிக்கு யதன், துர்வசு என்ற மைந்தர்கள் பிறந்தார்கள். சர்மிஷ்டையோ தன் அவல நிலை பற்றி எண்ணி வருந்தினாள். தேவயானி குழந்தைகள் பெற்றது கண்டு அவள் தேவயானி யயாதியை மணந்து கொண்டது போல தானும் ஏன் யயாதியை மணக்கக் கூடாது" என்று எண்ணினாள்.

ஒருநாள் யயாதி சர்மிஷ்டை வசிக்கும் இடத்திற்கு வரவே அவள் அவனை அணுகி "அரசே! நீங்கள் என் எஜமானிக்குக் கணவர் என்றால் எனக்கும் கணவரே. அதன்படி என்னை உங்கள் மனைவியாக ஏற்றுக் கொள்ளுங்கள்" என்றாள்.

சுக்கிராச்சாரியார் என்ன சொல்

வாரோ என்று யயாதி பயந்தான். பிறகு ரகசியமாக அவளுடன் வாழ்ந்து துருஹ்யன், அசன், புரு என்ற மைந்தர்களைப் பெற்றான். சர்மிஷ்டை குழந்தைகளைப் பெற்றது தேவயானிக்குத் தெரிந்து அவள் அவர்களைப் பார்க்கப் போனாள். சர்மிஷ்டையிடம் "இவர்களின் தந்தை யார்?" என்று கேட்கவே அவளும் வெட்கப்பட்டு "ஒரு மாமுனிவர் அருளால் இவர்கள் பிறந்தார்கள்" என்றாள்.

தேவயானியும் "மாமுனிவரா? யார் அவர்? என்ன கோத்திரம்?" என்று கேட்டாள். சரிமிஷ்டையோ "அவரது தேஜசைக் கண்டு நான் பிரமித்துப் போனேன். அதனால் எதுவும் அவரிடம் கேட்கவில்லை" என்றாள்.

மற்றொரு முறை அவள் சர்மிஷ்டையையும் அவளது புதல்வர்களையும் கண்ட போது அவர்களிடம் யயாதியின் ஜாடை இருப்பதைக் கண்டாள். அவர்களிடம் உங்கள் தந்தை யார் எனக் கேட்டபோது அவர்கள் யயாதி என்று கூறி அங்கிருந்த யயாதியையும் சுட்டிக் காட்டினார்கள்.

தேவயானி சர்மிஷ்டையின் பேரில் எரிந்து விழுந்து "நீ எனக்கே துரோகம் செய்து விட்டாயா?" எனக் கேட்டாள். சர்மிஷ்டை சற்றும் பயப்படாமல் "நீ இவரை மணந்தது போல நானும் இவரை மணந்து கொண்டேன். நீ என்னைவிட வயதில் பெரியவள். பிராம்மணப் பெண். அதனால் உன்னை மதிக்கிறேன். இவரோ ராஜரிஷி. அதனால் தான் ஒரு முனிவர் அருளால் இவர்களைப் பெற்றதாகக் கூறினேன்" என்றாள்.

அப்போது தேவயானி யயாதியிடம் "எனக்கு துரோகம் செய்த உங்களோடு இனியும் இருக்க மாட்டேன்" எனக் கூறித் தன் தந்தையிடம் போய் நடந்ததைச் சொன்னாள். சுக்கிரரும் கோபம் கொண்டு யயாதி முதுமையை அடையட்டும் எனச் சபித்தார்.



# அம்புலிமாமா செய்திகள்



## அதிர்ஷ்ட தேவதை

ஏழைகளான அராபிய தம்பதிகளுக்குக் குழந்தை பிறந்த போதே அது கோடீஸ்வரனாகி விட்டது. இஸ்ரேலின் டெல்அவிவ் நகரில் ஒரு மருத்துவ மனையில் மரியம் அலோமா என்பவள் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்போது இஸ்ரேலில் 'அதிர்ஷ்ட நட்சத்திரம்' என்ற லாட்டரி தொடங்கியது. அலோமா தன் குழந்தையின் பேரில் ஒரு லாட்டரி டிக்கட் வாங்கினாள். அது 1,000,000 ஷெகல் அதாவது 3,30,000 அமெரிக்க டாலருக்கு சமமானது. அதுவரை வேலையில்லாது அரசாங்கத்திடமிருந்து உதவித் தொகை பெற்று வந்த அதன் தாய் தந்தையர் தம் 'அதிர்ஷ்ட தேவதை' சம்பாதித்துக் கொடுத்த பணத்தில் முதலில் மெக்காவிற்கு போவது என்றும் பிறகு அக்குழந்தைக்கு நல்ல வீடு கட்டிக் கொடுப்பது என்றும் தீர்மானித்தனர்.

## முதல் பிறவி!

மிகமிகப் பழங்காலத்தின் டினோஜர் என்ற ராட்சஸப் பல்லிகளின் முட்டைகள் சிதைந்து ஆங்காங்கு கண்டுபிடிக்கப்பட்டதாகப் படிக்கிறோம். சென்ற ஏப்ரலில் தென் அமெரிக்காவின் பெருவில் 3,00,000 ஆண்டுகளுக்கு முன் இருந்த ஒரு குதிரையின் எலும்புக் கூடு கிடைத்துள்ளது. ஆராய்ச்சியாளர்களின் கூற்றுப்படி அக்குதிரையின் காலத்தை உண்மை எனக் கொண்டால் அதுவே உலகின் மிகப் பழமையான குதிரையின் எலும்புக் கூடாகும்.



## பத்து லட்சம் படங்கள்!

நியூயார்க்கில் குடியேறிய இந்திய தத்துவ குரு சின்மயர் அமைதிச் சின்னமான புறாவின் பத்து லட்சம் படங்களைச் சித்தரித்தார். அவர் பிஜி தீவில் இருந்தபோது சித்தரித்த படங்களை ரஷ்யாவின் முன்னாள் அதிபர் கோர்பசேவின் மனைவி ரைஜா கோர்பசேவிற்கு பரிசளித்தார். 'ஒவ்வொரு படமும் என் இதயப் பிரார்த்தனை' என்கிறார் சின்மயர்.




# சரியான அடி!

ஒரு ஊரில் ஒரு விவசாயி இருந்தான். அவன் மகன் கந்தனை வேலை செய்யச் சொல்லி கசக்கி பிழிந்து கொடுமைப்படுத்தி வந்தான். கந்தன் எவ்வளவு நன்றாக வேலை செய்தாலும் அவனது தந்தை அதில் ஏதாவது குறை கூறி தண்டித்து வந்தான். ஒரு வேலையை விரைவில் செய்து விட்டால் மற்றொரு வேலையை அவன் தலையில் சுமத்தி விடுவான்.

கந்தன் இருந்த ஊரில் முத்தாயி என்ற பெண் இருந்தாள். கந்தன் அவளை மணக்க விரும்பினான். முத்தாயிக்கும் அவனை மணந்து கொள்ள சம்மதமே. முத்தாயியின் தந்தையும் அந்தத் திருமணத்திற்குச் சம்மதித்தார். ஆனால் கந்தனின் தந்தையோ அதற்கு ஒப்புக் கொள்ளாமல் தன் மகனிடம் "உனக்கு சாப்பாடு போடுவதே தண்டம். அத்தோடு உன் மனைவிக்கும் சேர்த்தா கொட்ட வேண்டும்? நான் ஒப்ப மாட்டேன். நீயாக சம்பாதித்து அவளோடு தனியாகக் குடித்தனம் செய்ய முடியும் என்றால் தாராளமாக அவளை மணந்து கொள். ஆனால் என்னிடமிருந்து பைசா எதிர்பாராதே" என்றான்.

கந்தன் இனித் தானே சம்பாதிக்க வேண்டும் என்றும் தன் தந்தையிடம் வேலை செய்யக் கூடாது என்றும் நினைத்து ஒருநாள் தன் தந்தையிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டு வெளியேறினான். ஊரை விட்டுப் போவதை முத்தாயியிடம் மட்டும் அவன் கூறினான்.

அவன் நடந்து நடந்து ஒரு காட்டுப் பகுதியை அடைந்தான். அங்கே ஓரிடத்தில் ஒரு கிழவியைக் கண்டான். அவள் விறகுக் கட்டு ஒன்றைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு மெதுவாக நடந்து போய்க் கொண்டி

- வெ. பரத் -

ருந்தாள். கந்தன் அவளிடம் "பாட்டி! வயதான நீ ஏன் சிரமப்படுகிறாய்? உன் சுமையை நான் எடுத்து வருகிறேன்" என்றான். அவளும் "யாரப்பா நீ? எங்கே போகிறாய்?" என்று கேட்டவாறே விறகுக் கட்டைக் கந்தனிடம் கொடுத்தாள்.

கந்தனும் கிழவியிடம் தன்னைப் பற்றி கூறி "எங்காவது வேலை கிடைக்குமா என்றுதான் போய்க் கொண்டிருக்கிறேன். நாலு காசு, சம்பாதித்துக் கொண்டு ஊருக்குப் போய் முத்தாயியைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்" என்றான்.

கிழவியும் "அப்படியானால் நீ என்னிடமே வேலை செய். வேலை செய்யும் வரை சாப்பாடு போட்டு வருட முடிவில் உன் சம்பளத்தை மொத்தமாகக் கொடுக்கிறேன்" என்றாள். கந்தனும் அதற்குச் சம்மதித்து அங்கே வேலை செய்யலானான்.

ஒரு வருடம் கழிந்தது. கந்தன் கிழவியின் வீட்டு ஆடு மாடுகளை மேய்த்தும் அவற்றிற்குத் தீவனம் வைத்தும், பால் கறந்தும், தோட்டத்தில் காய்கறிகளைப் பயிரிட்டும், காட்டிலிருந்து விறகு வெட்டிக் கொண்டு வந்தும் மிகுந்த அக்கறையுடன் வேலைகளைச் செய்து வந்தான். வருட முடிவில் கிழவி "நீ வருடம் பூராவும் நன்றாக வேலை செய்தாய். உனக்கு சம்பளத்திற்கு பதிலாக இந்தக் கழுதையைக் கொடுக்




கிறேன். இது சாதாரணக் கழுதை இல்லை. இதன் இரண்டு காதுகளையும் பிடித்து உலுக்கினால் இது 'ஹி! ஹி'! என்று கனைத்தவாறே முத்துக்களையும் ரத்தினங்களையும் உதிர்க்கும். அவற்றைக் கொண்டு நீ சுகமாக வாழலாம்" என்றாள்.

கந்தனும் கழுதையின் காதைப் பிடித்து உலுக்கவே அது முத்தையும் ரத்தினத்தையும் உதிர்த்தது. அது கண்டு மகிழ்ந்து அவன் அதை ஓட்டிக் கொண்டு கிழவியிடம் விடை பெற்றுக் கொண்டு தன் ஊருக்குக் கிளம்பினான். வழியில் ஒரு கிராமத்தில் ஒரு ஊட்டுப்பிறை வைத்து நடத்தும் ஒரு கிழவியின் வீட்டில் இரவில் தங்கி தன் கழுதையை




அவ்வீட்டின் கொல்லைப் புறத்தில் கட்டினான்.

கிழவி சாப்பாட்டிற்கும் தங்குவதற்கும் பணம் கேட்கவே "இரு. இதோ கொண்டு வருகிறேன்" எனக் கூறி வீட்டின் பின்புறம் சென்றான். அப்போது கிழவியின் மகன் அவன் என்ன செய்கிறான் என்று மறைந்திருந்து பார்க்கலானான். கந்தன் கழுதையின் காதுகளைப் பிடித்து உலுக்கி முத்தையும் ரத்தினத்தையும் எடுத்ததைக் கண்டான். கந்தன் உள்ளே போனதும் அந்தக் கழுதையை அவிழ்த்து பத்திரமான இடத்தில் கட்டிவிட்டு ஒரு சாதாரணக் கழுதையை இழுத்து வந்து அந்த இடத்தில் கட்டி விட்டான்.

கந்தன் ஒரு முத்தை கிழவியிடம் கொடுத்து அவள் போட்ட சாப்பாட்டை சாப்பிட்டு விட்டு அன்றிரவு தங்கினான். மறுநாள் காலை அவன் கிழவியிடம் விடைபெற்றுக் கொண்டான். தன் கழுதையைக் கட்டி வைத்திருந்த இடத்திற்குப் போய் அங்கு கட்டப்பட்டிருந்த கழுதையை அவிழ்த்து ஓட்டிக் கொண்டு அவன் தன் ஊருக்குப் போனான்.

அவன் தன் தந்தையிடம் தான் சம்பளத்திற்குப் பதிலாகப் பெற்ற கழுதையின் சிறப்பைக் கூறி "இப்போது பார்! இது முத்துக்களாகவும் ரத்தினங்களாகவும் கொட்டப் போகிறது" என்று கூறி அதன் காதுகளைப் பிடித்து உலுக்கினான். கழுதையோ அவனை உதைத்தது. முத்துக்களை உதிர்க்கவில்லை.

அதைக்கண்ட அவனது தந்தை "போடா முட்டாளே! யாரோ உன்னை நன்றாக ஏமாற்றி விட்டார்கள். போ. இனிமேல் என் கண்முன் நிற்காதே" என்று கூறி விரட்டி விட்டான்.

கந்தனுக்குக் கழுதையின் சக்தி எப்படி மறைந்து போய் விட்டது என்பது புரியாத புதிராக இருந்தது. அவன் மறுபடியும் வேலை தேடிக் கொண்டு ஊரைவிட்டு கிளம்பினான். ஒரு காட்டு வழியே போகும்போது ஒரு கிழவனான தச்சன் மரத்துண்டுகளைச் செதுக்கி கட்டாகக் கட்டி எடுத்துக் கொண்டு செல்வதை அவன் கண்டான்.

கந்தன் அவனிடம் "ஐயோ பாவம்! இந்தக் கிழ வயதில் இப்படி சிரமப் படுகிறீர்களே. நான் உங்கள் வீட்டிற்கு இதைச் சுமந்து வருகிறேன்" என்றான். தச்சனும் கந்தனைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டு "சரி. நீ என்னிடம் ஒரு வருடம் வேலை செய். உனக்கு சாப்பாடு போட்டு வருட முடிவில் ஏதாவது கணிசமாகக் கொடுக்கிறேன்" என்றான். கந்தனும் சம்மதித்து ஒரு வருட காலம் தச்சனிடம் வேலை செய்தான்.

கந்தன் அவனிடம் விடைபெற்ற போது தச்சன் அவனிடம் ஒரு வெங்கலத் தட்டைக் கொடுத்து "இதை நீ தட்டி 'சாப்பாடு போடு' என்றால் உடனே நல்ல விருந்து சாப்பாட்டைக் கொடுக்கும்" என்றான். கந்தனும் அதன் முன் உட்கார்ந்து தட்டைத் தட்டி சாப்பாடு போடச் சொல்லவே அது உடனே நல்ல சாப்பாட்டைக் கொடுத்தது. அவன் அதைச் சாப்பிட்டு விட்டு திருப்தி அடைந்து தச்சனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

வழியில் அவன் முன்பு சென்ற ஊட்டுப்பிறைக்கே சென்றான். அன்றைய இரவை அங்கு கழிக்க விரும்புவதாக அங்கிருந்த அதே கிழவியிடம் கூறவே அவள் சாப்பாட்டிற்குப் பணம் தர வேண்டும் என்றாள். கந்தனோ "எனக்கு சாப்பாடு வேண்டாம். நானே ஏற்பாடு செய்து கொள்கிறேன்" என்று கூறி மூலையில் உட்கார்ந்து தன் தட்டை எடுத்துத் தன் முன் வைத்து தட்டி 'சாப்பாடு





போடு' என்றான். மறுநிமிடம் அதில் விருந்து சாப்பாடே வந்தது.

அவனுக்கு மட்டுமல்லாமல் அந்த சாப்பாடு அங்கிருந்த அந்தக் கிழவிக்கும் அவளது மகனுக்கும் கிடைத்தது. கிழவியின் மகன் அதைக் கண்டு அந்தத் தட்டை திருடிக் கொண்டு விடத் தீர்மானித்தான். அதனால் கந்தன் இரவில் தூங்கியதும் கிழவியின் மகன் அந்தத் தட்டைக் கந்தனிடமிருந்து எடுத்துக் கொண்டு அதற்குப் பதிலாக அதே போன்ற ஒரு வெங்கலத் தட்டை வைத்து விட்டான்.

அதை அறியாத கந்தன் மறுநாள் காலை அங்கிருந்து கிளம்பி தன் ஊரை அடைந்தான். அவன் தன் தந்தையிடம் தான் கொண்டு வந்துள்ள வெங்கலத் தட்டைப் பற்றிக் கூறி "இதோ பாருங்கள் சாப்பாடு வரவழைக்கிறேன்" என்று தட்டை எடுத்துத் தட்டி 'சாப்பாடு போடு' என்றான். ஆனால் எவ்வளவு தடவை முயன்றும் தட்டு சாப்பாட்டைத் தரவில்லை.

அவனது தந்தை கோபம் கொண்டு "இந்த தடவையும் உன்னை யாரோ ஏமாற்றி விட்டான். நீ எதற்கும் உதவாதவன். போ. போ" என்று கூறி அவனை விரட்டி விடவே அவன் மறுபடியும் வேலை தேடிக் கொண்டு கிளம்பினான். அவன் போய்க் கொண்டே ஒரு கால்வாய்க் கரையை அடைந்தான். அங்கு ஒரு மரத்தை ஒரு கிழவன் வெட்டிக் கொண்டிருப்பதை அவன் கண்டான்.

கந்தன் அவனிடம் "கிழவரே! இதை ஏன் வெட்டுகிறீர்கள்?" என்று கேட்க அவனும் "இந்தக் கால்வாயின் மேல் இதைப் பாலம் போல் போடப் போகிறேன்" என்றான். அதைக் கேட்ட கந்தன் "கோடாலியை இப்படிக் கொடுங்கள். நான் வெட்டிப் போடுகிறேன். நீங்கள் சிரமப்பட வேண்டாம்" என்று கூறிக் கிழவனிடமிருந்து கோடாலியை வாங்கி அடிமரத்தில் வெட்டி அதைச் சாய்த்து கால்வாயின் குறுக்கே பாலம் போல விழச் செய்தான்.

அதுகண்டு கிழவன் மகிழ்ந்து "நீ செய்த உதவிக்கு பதிலாக இந்தத் தடியைக் கொடுக்கிறேன். நீ யாரை

அடிக்க நினைத்தாலும் இது அவனை அடித்துக் கொண்டே இருக்கும். நீ போதும் என்றதுமே அது அடிப்பதை நிறுத்தி உன் கைக்கே வந்து விடும்" என்று கூறி ஒரு தடியைக் கொடுத்தான். கந்தனும் அதை வாங்கி "எங்கே காற்றை அடி பார்க்கலாம்" என்றான். உடனே அத்தடி உயரப் போய் காற்றை அடிப்பது போல மேலும் கீழும் அசைந்தது. அவன் போதும் என்றதும் தடி அவன் கைக்கு வந்து விட்டது.

தன்னை ஒருவேளை ஊட்டுப் பிறைக் கிழவியும் அவள் மகனும் ஏமாற்றி விட்டார்களோ என்ற சந்தேகம் அப்போதுதான் அவனுக்கு வந்தது. உடனே தடியோடு அவன் அந்த ஊருக்குப் போய் ஊட்டுப் பிறையை அடைந்தான்.

அவன் கிழவியிடம் "என்ன பாட்டீ! என்னைத் தெரிகிறதா?" என்று கேட்கவே அவள் "தெரியவில்லையே!" என்றாள். அப்போது அவளருகே இருந்த அவள் மகனும் "இவன் யார்?" என்று கேட்டான். கந்தனும் "நீதானே என் கழுதையையும், வெங்கலத் தட்டையும் திருடியவன்?" என்று கேட்டான்.

"இல்லையே" என்று கிழவியின் மகன் கூற கந்தன் தன் தடியை எடுத்து அவனை அடிக்கச் சொன்னான். அது நிறுத்தாமல் அவனை அடித்துக் கொண்டே இருந்தது. வலி தாங்க முடியாமல் அவன் "ஆமாம். அவற்றை நான்தான் திருடினேன். கொடுத்து விடுகிறேன். என்னை மன்னித்து விடு" என்று கந்தனிடம் கெஞ்சினான்.

கந்தனும் "போதும்" என்றான். எனவே தடி அவனிடம் வந்துவிட்டது. கந்தன் தட்டை வாங்கிக் கொண்டு தன் கழுதை மீதேறி தடியுடன் தன் ஊருக்குச் சென்றான். தான் அடைந்த பொருள்களால் அவன் பெரிய பணக்காரனானான். அவன் முத்தாயியை மணந்து கொண்டு அங்கு சுகமாக வாழலானான்.





# கோபமும் மறதியும்

கோட்டூர் கோபாலனுக்கு முன் கோபம் அதிகம். அதற்கு தூபம் போடுவது போல அவனுக்கு வாய்த்த மனைவி கோமதிக்கோ ஞாபக மறதி அதிகம். இதனால் தினமும் அவர்களிடையே சண்டை ஏற்பட, அக்கம்பக்கத்தவர்கள் வேடிக்கை பார்த்து சிரித்து ரசித்து வந்தார்கள். இந்த அவமானத்தை எப்படி சகிப்பது என்று கோமதி யோசிக்கலானாள்.

ஒருநாள் வயலிலிருந்து திரும்பி வந்த கோபாலன் "காலையிலேயே என் சட்டையையும் வேட்டியையும் துவைத்து உலர்த்தி எடுத்து வைக்கச் சொன்னேனே. செய்தாயா?" என்று கேட்டான். கோமதியும் "அடடா! மறந்தே போய் விட்டேன்" என்றாள்.

கோபாலனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் உடனே "சொன்னதைச் செய்யாமல் இருக்கிறாய். கேட்டால் மறதி என்கிறாய். நாளைக்கு இந்த அழுக்குத் துணிகளையே போட்டுக் கொண்டு கல்யாணத்திற்குப் போய் அவமானப்படுகிறேன் போ" என்று வெறுப்புடன் கூறினான்.

அவளோ "நான் மறந்து விட்டேன். என்ன செய்வது?" என்றாள். உடனே கோபாலன் கோபத்தோடு "என்ன செய்வது? என் தலையெழுத்து! உன்னோடு வாழ்ந்து தொலைக்க வேணுமே" என்று கத்தினான். இந்த சண்டையை அக்கம்பக்கத்தவர்கள் தம் வீட்டு வாசலில் நின்றபடியே கேட்டு சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

கோமதிக்கு இது பெருத்த அவமானமாகத் தோன்றியது. அவள் தன் கணவனின் கோபத்தைத் தணிக்க முயன்றாள். ஆனால் கோபாலன் ஆத்திரம் அடங்காமல் "இந்தத் துணிகளையே அணிந்து கொண்டு போய்

- கி. பாலாஜி -

அவமானப்படுகிறேன்" என்று கூறிக் கொண்டு தன் அறைக்குள் போய் விட்டான்.

சற்று நேரத்திற்குப் பின் அடுத்த வீட்டுக் கமலாவும் கோமளமும் கோமதியைக் காணவந்து "கோமதி! நீதான் எவ்வளவு சிரமப்படுகிறாய்! உன் புருஷன் இப்படிக் காட்டு கத்து கத்துகிறாரே! இப்படிப் பட்ட வருடன் நீ எப்படித்தான் குடித்தனம் செய்கிறாயோ? நாங்களாக இருந்தால் என்றோ ஆற்றிலோ குளத்திலோ விழுந்து உயிரை விட்டிருப்போம்" என்று அவளுக்கு ஆறுதல் கூறுவது போல வெறுப்பையும் மூட்டினார்கள்.



அவர்கள் போன பின் கோமதி யோசித்தாள். ஆமாம். அவர்கள் கூறுவது சரிதான். இந்த மாதிரிக் கோபக்காரக் கணவனிடமிருந்து விடுபட ஒரே வழி தற்கொலை செய்து கொள்வதுதான். இப்படி எண்ணி ஒரு கடிதத்தை எழுதி தன் கட்டிலின் மீது மறுநாள் காலை வைத்து விட்டு கோமதி வீட்டை விட்டு கிளம்பிப் போய் விட்டாள். கோபாலனோ அதற்கு முன் கல்யாணத்திற்குப் போய்விட்டான்.

மாலையில்தான் கோபாலன் திரும்பி வந்தான். அவன் கண்களில் கோமதி எழுதி வைத்துப் போன கடிதம் தென்பட்டது. அவன் அதை எடுத்துப் படித்தான். அதில் அவள் தான் தற்கொலை செய்து கொள்ளப் போவதாக எழுதி இருப்பது கண்டு பயந்து போனான். ஊரெங்கும் அலைந்து திரிந்தான். குளம், குட்டைகளில் பார்த்தான். எங்கும் கோமதியைக் காணவில்லை.

இதுபற்றி தன் மாமனாரிடம் உடனே தெரிவிக்க வேண்டும் என நினைத்து அவன் அவர் இருக்கும் அடுத்த ஊருக்கு ஓடினான். அவர் தம் வீட்டு வாசலில் உட்கார்ந்திருப்பது கண்டு கோமதி எழுதிய கடிதத்தைக் கொடுத்தான்.

அவனுடைய மாமனார் அக்கடிதத்தைப் படித்துவிட்டு "இந்தக் கடிதத்தின்படி கோமதி தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் அவளோ உள்ளே இருக்

கிறாளே. போய்ப் பாருங்கள்" என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

அப்போது கோமதியே வாசலுக்கு வந்து விட்டாள். அப்போது தன் கணவனையும் தன் தந்தையின் கையிலிருந்த கடிதத்தையும் அவள் பார்த்தாள். சட்டென அவரிடமிருந்து அக் கடிதத்தை பிடுங்கி "இதென்னப்பா கடிதம்?" என்று கேட்டு அதனை அவள் படித்தாள்.

பிறகு அவள் கடகடவென்று சிரித்து "அடடா! எனக்குத்தான் என்ன ஞாபக மறதி! இக்கடிதத்தை எழுதி வைத்து விட்டு வீட்டை விட்டு வெளியே வந்ததும் அந்த விஷயத்தையே மறந்து விட்டேன். நேராக இங்கே வந்து விட்டேன். பரவாயில்லை. இந்தக் கோபக்காரருடன் நான் வாழ முடியாது. இப்போதே தற்கொலை செய்து கொள்கிறேன்" என்று கொல்லைப் புறமுள்ள கிணற்றை நோக்கி ஓடினாள்.

சட்டென கோபாலன் ஓடி அவளைத் தடுத்து "கோமதி! என் கோபம் உன்னை தற்கொலை வரைக் கொண்டு போனதென்றால் உன் ஞாபக மறதி உன் உயிரைக் காத்தது. என் கோபம் இப்படிச் செய்யும் என்று நினைக்கவில்லை. இனிமேல் நான் கோபம் கொள்ள மாட்டேன். வா வீட்டிற்குப் போகலாம்" என்றான்.

கோமதியும் "என் ஞாபக மறதி தான் உங்கள் கோபத்தை அதிகரித்தது. இது எனக்கு ஒரு வியாதியோ என்னவோ! இதற்கு வைத்தியரைப் பார்த்து மருந்து வாங்கிக் கொள்கிறேன்" என்றாள்.

அப்போது கோபாலனின் மாமனார் "நீங்கள் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டீர்கள். இப்படித்தான் இருக்க வேண்டும். இனிமேல் உங்கள் வாழ்க்கையில் பிரச்னைகள் எழாது" என்றார்.

கோபாலனும் கோமதியும் சிரித்துக் கொண்டே தலை குனிந்து நின்றனர்.



# இயற்கை விநோதங்கள்

## பறக்கும் நரிகளா?



பறக்கும் நரிகளா? எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? நரி பறப்பது உண்மையா? ஆமாம் உண்மையே. ஆனால் இவை நரிகள் அல்ல. ஒருவகை வௌவால்கள். இவற்றின் முகம் மட்டும் நரியினுடையது போல் இருக்கும். அதனால்தான் இவற்றிற்கு இந்தப் பெயர் வந்தது. மலேசியக் காடுகளில் இவை அதிகமாகத் தென்படுகின்றன. மிருதுவான பழங்களை விரும்பி உண்கின்றன. இவை இறக்கைகளின் உதவியால் பழங்களைச் சாப்பிடுவதைக் காண வேடிக்கையாக இருக்கும். இவற்றின் ஒவ்வொரு இறக்கையும் நாலடி நீளம் இருக்கும். இவை பழங்களையே விரும்பிச் சாப்பிடுவதால் வீடுகளில் எளிதாக வளர்க்கலாம். ஆனால் இவற்றிற்காகப் பெரிய கூண்டுகளைச் செய்ய வேண்டி வரும். இவற்றைப் பழக்கி வளர்ப்பதால் இவை வீட்டை விட்டுப் போய் விடாது. மற்ற வௌவால்களைப் போல இவையும் தலைகீழாகத் தொங்கும்.

## கேடு விளைவிக்கும் காளான்கள்!



சாதாரணமாகச் செடிகள் வளர சூரிய வெளிச்சம் தேவை. ஆனால் நாய்க் குடைகள் எனப்படும் காளான்கள் வளர ஒளி தேவை இல்லை. மழை காலத்தில் காலை வேளையில் வயல்வெளிகளில் நடந்தால் முதல் நாள் தென்படாத காளான்கள் மறுநாள் காலை அடர்ந்து வளர்ந்திருப்பதைக் காணலாம். சிறுவர்கள் இவற்றை பிடுங்கி விளையாடுவதைக் காணலாம். ஆனால் இவற்றில் சில பயங்கர விஷத்தன்மை கொண்டவை. தொட்டாலே அரிக்கும். நோய் வந்து விடும். இவற்றில் எவை நல்லவை எவை கெடுதல் செய்பவை என்பதை நல்ல அனுபவசாலிகளால்தான் கூற முடியும். எனவே குழந்தைகள் இவற்றை அணுக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

## சூரியனின் மரணம்



சூரிய கோள கேந்திரத்தில் ஹைட்ரஜன் வாயு இல்லாது போனதாக ஊகிக்க முடியுமா? அப்போது ஏற்படும் அணு வெடிப்பினால் முதலில் சூரிய கோளம் பெரிதாகி மிகப் பெரிய சிவப்பு உருண்டையாக ஆகி விடும். அதனால் பூமி கருகி சாம்பலாகி விடும். அப்போது சூரியன் இப்போதுள்ளதை விட நூறு மடங்கிற்கும் மேல் பெரிதாகி வானவெளியில் புகைச் சுருளாக மாறி விடும். ஆனால் இப்படி எல்லாம் எப்போது நடக்கப் போகிறது தெரியுமா? பல கோடி ஆண்டுகளுக்குப் பிறகு என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்**



S.B. Prasad



S.R. Prasad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ ஆகஸ்டு 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

---

## ஜூன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **உயிரைக் கொடுத்து உணவாகும்**
இரண்டாவது போட்டோ : **உணவுக்காக உயிரை எடுக்கும்**
பரிசு பெற்றவர் : **திருமதி சாந்திகணேஷ், நெய்வேலி - 3.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா




அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. **105.00** விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. **111.00** விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

# இதை மிஞ்ச முடியுமா !




**big chief**

பழங்களின் சுவை கொண்ட டாஃபி

பார்லே

வாழைப்பழம் ♦ மேங்கோ ♦ ஆரஞ்சு

everest/94/PP/72-tm